உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திரிசிராமலைமான்மியசங்கிரகம்.

இஃது

திரிசிரபுரம்

ஸ்ரீதாயானசெல்வருக் கடிமைபூண்டொழுகும்

## தி. வீ. சண்முகப்பிள்ளை

அவர்களால்

வசனரூபமாகச்செய்யப்பட்டது.

Trichinopoly.

PRINTED BY T. V. VENKATRAYULU NAYUDU AT THE "RIPON" PRESS TEPPAKULAM.

சர்வதாரி ௵ தை ௴ ௧௰௨ குருவாரம்.

1889



ஸ்ரீமாதுருபூதேஸ்வரர்.



ஸ்ரீசுகந்தகுந்தளாம்பாள்



உ

சிவமயம்.

# சாற்றுக்கவிகள்.

திருவாவடுதுறை ஆதீனத்தைச்சேர்ந்த

திருவானைக்கா மடத்திலிருக்கும்

மகா-௱-௱-ஸ்ரீ

## ஆறுமுகத்தம்பிரான்சுவாமியவர்கள்

இயற்றியது.

கட்டளைக்கலித்துறை.

நிலந்தங்குசீர்மட்டுவார்குழலோடெங்கணின்மலன்வாழ்
நலந்தங்குசெல்வந்திமான்மியமெல்லப்பாவலன்செய்
குலந்தங்குபான்மைக்கியையவசனங் குலவச்செய்தான்
புலந்தங்குவண்மைச்சிரபுரச்சண்முகபூபதியே.

புதுக்கோட்டை சமஸ்தானம்

மகா-௱-௱-ஸ்ரீ

ஹிஸ். ஹைனெஸ் மஹாராஜா அவர்கள் காலீஜ தமிழ்ப்பண்டிதர்

திரிசிரபுரம்

## பெ. சரவணப்பிள்ளை அவர்கள்

இயற்றியவை.

எழுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

செஞ்சுடர்தவழுஞ்சிகரமுமருவித்தெள்ளமுதெனப்புவிக்குதவும்
மஞ்சுசூழ்மலைச்சிரகிரிவாசமங்கைவாமச்சிவபெருமான்
விஞ்சுமான்மியத்தைவசனரூபமதாய்விளக்கினனெவருமீடேறப்
புஞ்சிதசைவக்குலநிதிமேன்மைப்புண்ணியசண்முகப்புயலே.

## வெண்பா.

---

தேன்மணக்குஞ்சோலைச் சிராகிரிவாழீசனருள்
மான்மியபுராணத்தை வாக்கியமாய்ப்—பான்மதியக்
தங்கவிசைத்தான்கயிலைச் சம்புசிவனேசநலம்
பொங்கவிசைச்சண்முகப் பூமன்.

---

சிவமயம்.

# அட்டவணை.

| | பக்கம் |
|---|---|
| கடவுள்வணக்கம் ... ... ... ... | ௩ |
| புராணவரலாறு ... ... ... ... ... | ௯ |
| திருநபலைச்சருக்கம் ... ... ... ... | ௧௧ |
| பிரமதேவனசத்தியந்தீர்ந்தசருக்கம் ... ... ... | ௧௫ |
| அகஸ்தியச்சருக்கம் ... ... ... ... | ௨௧ |
| இந்திரச்சருக்கம் ... ... ... ... ... | ௨௪ |
| தீர்த்தச்சருக்கம் ... ... ... ... | ௨௬ |
| திருநகரச்சருக்கம் ... ... ... ... | ௨௯ |
| நினைத்ததுமுடித்தசருக்கம் ... ... ... | ௩௧ |
| சாரமாமுனிச்சருக்கம் ... ... ... | ௩௩ |
| சூராவாதித்தச்சருக்கம் ... ... ... | ௩௬ |
| உறையூரழித்தசருக்கம் ... ... ... | ௪௩ |
| தாயானசருக்கம் ... ... ... | ௫௨ |

சிவமயம்.

# பிழைதிருத்தம்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|
| ௫ | ௯ | த்தும்ப | ததும்ப |
| ௭ | ௧௧ | சிராப்பள்ளி | சிரப்பள்ளி |
| ௯ | ௮ | ஜடமுடி | ஜடாமுடி |
| ௧௧ | ௫ | ஞ்ான | ஞான |
| ௧௩ | ௨௫ | அஷ்கஜங்கள் | அஷ்டகஜங்கள் |
| ௨௰ | ௭ | சுவாமி | சுவாமீ |
| ௨௧ | ௨௧ | தேவரீருயடய | தேவரீருடைய |
| ௩௧ | ௧௪ | இலங்கைபில் | இலங்கையில் |
| ௩௪ | ௩௰ | தனது | தமது |
| ௪௰ | ௪ | திருநந்தவனத்தில் | திருநந்தனவனத்தில் |
| ,, | ௩௰ | மாமனூராசிய | மாமனூராகிய |
| ௪௭ | ௭ | சொல்லாமல் | செல்லாமல் |

உ

சிவமயம்.

# முகவுரை.

திரிசிராமலை மான்மியமாகிய செவ்வந்திப் புராணமானது சூதமுனிவரால் அறுபத்தொன்கு அத்தியாயங்களாகவும், கௌதமமுனிவரால் பதினெட்டு அத்தியாயங்களாகவும் சமஸ்கிருதத்தில் அருளிச் செய்யப்பட்டிருக்கின்றது. கௌதம முனிவரால் திருவாய் மலர்ந்தருளிய பதினெட்டு அத்தியாயங்களைச் சைவ எல்லப்ப நாவலரவர்கள் தமிழில் மொழிபெயர்த்துப் பதினொரு சருக்கங்களாகத் தொகுத்து, விருத்தச் செய்யுள்களாலியற்றி இருகின்றனர். அவைகள் கற்றோர்க்கன்றி மற்றோர்களுக்கு எளிதில் புலப்படவேண்டுமென்ற அவாவினால் யான் அவைகளைச் சுருக்கி ஒருவாறு எளியநடையான வசனரூபமாகச் செய்தேன். கிள்ளைகுளறுமொழியாகிய மதலைச் சொற்களைக் கேட்டுப்பெற்றோர்கள் எவ்வாறு சந்தோஷப்படுகின்றார்களோ அவ்வாறு சிற்றறிவினையுடையயான் சிறுவசனங்களாற் கூறியிருக்கும் சிவபெருமானது இத்திவ்ய சரித்திரங்களுள் எவ்வகைக் குற்றங்களிருந்த போதிலும், அவைகளைக்குணமாகக்கொண்டு அங்கீகாரஞ்செய்வது கற்றுணர்ந்தடங்கிய பெரியோர்களது கடமையன்றோ?

இங்ஙனம்
ஸ்ரீதாயானசெல்வருக்கு
அடிமை பூண்டொழுகும்
தி. வீ. சண்முகம்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திரிசிராமலைமான்மியசங்கிரகம்.

காப்பு

அருளெனுங்கடன்முகந் தடியர்சிந்தையாம்,
பொருள்பெறுநிலஞ்சிவ போகமுற்றிட,
வரமழையுதவுசெவ் வந்தியானையின்,
திருவடியிணைமலர் சென்னிசேர்த்துவாம்.

பாயிரம்.

கடவுள்வணக்கம்.

செவ்வந்தீஸ்வரர்.

சொற்கொண்டகிளியனையா ரனங்கனுக்குத்துணையாகத் துணைப் [புருவ,
விற்கொண்டுவிளையாடுந் திரிசிராமலையிலுறை விமலன்றன்னைப்,
பொற்கொண்டநிறத்தானுங் கரியமுகினிகர்வானும் புலராவண்ண
மற்கொண்டமிடற்றானைச் செவ்வந்திப்பெருமானை யகத்திற்சேர்ப் [பாம்.

மட்டுவார்குழலம்மை.

பனிகொள்வரையிற்பிறந்தபிடி பாருறிடத்திற்படர்ந்தகொடி,
முனிவரிமையோர்மகிழ்வுற முப்பத்திரண்டும்வளர்த்தருளும்,
வனிதைவடிவேலனைப்பயந்த மடந்தைமட்டுவார்குழலா,
ளினியபதமாமிருபோதுந் தலைமேற்றரிப்பாமிருபோதும்.

விநாயகர்.

மருப்பதாமெழுத் தாணியாலாயிர மாற்றுப்,
பொருப்பதாந்தனி யேட்டிலேபாரதப் பொருளை,
விருப்பதாம்படி யெழுதியகரிமுக விமலன்,
திருப்பதாம்புய மலரிணையிறைஞ்சுவாஞ் சிரத்தால்.

சுப்பிரமணியர்.

ஓகையாற்றிரைமுன்னுளி னுழக்குமாவினையும்வாட்டு,
மேகவெவ்வரையினெல்லை யிடித்திடுமிமையோர்போற்றத்,
தோகைமேலுலவுங்கந்தன் சுடர்க்கரத்திருக்கும்வெற்றி;
வாகையேசுமக்கும்வேலை வணங்குவதெமக்குவேலை.

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்.

வண்டகத்தேகுடைந்தூத முறுக்கவுடைந்து வாய்திறந்து
தண்டகத்தேமதுவொழுகி வழியுங்கமலத் தார்ப்புயத்தான்,
கண்டகர்க்கேவிடமாகி யடியார்க்கமுதாங் கவுணியன்றன்;
முண்டகத்தாண்மலர்தலைமேன் முடித்தேனின்றான் முடித்தேனே.

திருநாவுக்கரசுசுவாமிகள்.

புத்தியற்றிருக்கும்பொய்யர் புறச்சமயத்தைநீங்கிச்,
சத்தியப்பொருளையோர்ந்து தலைவனையறிந்துசைவ,
பத்தியிற்கனிந்தஞானப் பழத்தினையொருகற்றூணா;
லத்தியைக்கடந்தநாவுக் கரசினைவணங்குவோமே.

சுந்தரமூர்த்திசுவாமிகள்.

தீங்கும்பெருமாநிலத்திடருந் தீரத்தீரத்திரைக்கடலிற்,
றூங்கும்பெருமாளுடன்வேதன் றுதிக்கும்படிக்குச்சுடர்க்கிரியா,
யோங்கும்பெருமாள்புகழ்பாவி யோராயிரம்பொனொருமொழிக்கு
வாங்கும்பெருமாள் சவுந்தரியப் பெருமாள்பதத்தைவணங்கிடுவாம்.

மாணிக்கவாசகசுவாமிகள்.

தேனூறும்வாசகங்களறுனூறுந்திருக்கோவை,
நானூறுமமுதூற மொழிந்தருணநாயகனை,
வானூறுங்கங்கைநிகர் மாணிக்கவாசகனை,
யானூறுபடாதவகை யிருபோதுமிறைஞ்சிடுவேன்.

சண்டேஸ்வரர்.

மணத்தாதுசெறிமலருஞ் செழுங்கனியுங்கொணர்ந்துசிறு மணலை [வாரி
யணைத்தாதிசிவன்வடிவா யமைத்தருளியவற்கினிதா வாட்ட [வேண்டிக்

கணத்தாவின்பால்கறந்து நிறைத்துவைத்தகலசமெலாங்
கவிழ்த்ததாதை,
யிணைத்தாளைத்தடிந்திறைவர் துணைத்தாளையடைந்தவர்தாளி
[றைஞ்சுவோமே.



உ

# சிவமயம்.

---

## திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள் அருளிச்செய்த

---

### திருச்சிராப்பள்ளி—பண்—குறிஞ்சி.

### திருச்சிற்றம்பலம்.

---

நன்றுடையானைத் தீயதில்லானை நரைவெள்ளே
றொன்றுடையானை யுமையொருபாக முடையானைச்
சென்றடையாத திருவுடையானைச் சிராப்பள்ளிக்
குன்றுடையானைக் கூறவென்னுள்ளங் குளிருமே க

கைம்மகவேந்திக் கடுவனொடூடிக் கழைபாய்வான்
செம்முகமந்தி கருவரையேறுஞ் சிராப்பள்ளி
வெம்முகவேழத் தீருரிபோர்த்த விகிர்தாநீ
பைம்முகநாகம் மதியுடன்வைத்தல் பழியன்றே. உ

மந்தம்முழவம் மழலைத்ததும்ப வரைநீழற்
செந்தண்புனமுஞ் சுனையுஞ்சூழ்ந்த சிராப்பள்ளிச்
சந்தம்மலர்கள் சடைமேலுடையார் விடையூரு
மெந்தம்மடிக ளடியார்க்கல்ல லில்லையே. ௩

துறைமல்குசாரற் சுனைமல்குநீலத் திடைவைகிச்
சிறைமல்குவண்டுந் தும்பியும்பாடுஞ் சிராப்பள்ளிக்
கறைமல்குகண்டன் கனலெரியாடுங் கடவுளெம்
பிறைமல்குசென்னி யுடையவனெங்கள் பெருமானே. ௪

கொலைவரையாத கொள்கையர்தங்கண் மதின்மூன்றுஞ்
சிலைவரையாகச் செற்றனரேனுஞ் சிராப்பள்ளித்
தலைவரைநாளுந் தலைவரல்லாமை யுரைப்பீர்கா
ணிலைவரைநீல முண்டதும்வெள்ளை நிறமாமே. ௫

வெய்யதண்சாரல் விரிநிறவேங்கைத் தண்போது
செய்யபொன்சேருஞ் சிராப்பள்ளிமேவிய செல்வனார்
தையலோர்பாக மகிழ்வர்நஞ்சுண்பர் தலையோட்டி
லையமுங்கொள்வ ராரிவர்செய்கை யறிவாரே. ௬

வேயுயர்சாரற் கருவிரலூகம் விளையாடுஞ்
சேயுயர்கோயிற் சிராப்பள்ளிமேவிய செல்வனார்
பேயுயர்கொள்ளி கைவிளக்காகப் பெருமானார்
தீயுகந்தாட றிருக்குறிப்பாயிற் றாகாதே. எ

மலைமல்குதோளான் வலிகெடவூன்றி மலரோன்றன்
றலைகலனாகப் பலிதிரிந்துண்பர் பழியோரார்
சொலவலவேதஞ் சொல்வலகீதஞ் சொல்லுங்காற்
சிலவலபோலுஞ் சிராப்பள்ளிச்சேடர் செய்கையே. அ

அரப்பள்ளியானு மலருறைவானு மறியாமைக்
கரப்புள்ளிநாடிக் கண்டிலரேனுங் கல்சூழ்ந்த
சிராப்பள்ளிமேய வார்சடைச்செல்வர் மனைதோறு
மிரப்புள்ளீரும்மை யேதிலர்கண்டா லிகழாரே. கூ

நாணாதுடைநீத் தோர்களுங்கஞ்சி நாட்காலே
யூணாப்பகலுண் டோதுவோர்களு முரைக்குஞ்சொற்
பேணாதுறுசீர் பெறுதுமென்பீரெம் பெருமானார்
சேணார்கோயில் சிராப்பள்ளிசென்று சேர்மினே. ம

தேனயம்பாடுஞ் சிராப்பள்ளியானைத் திரைசூழ்ந்த
கானல்சங்கேறுங் கழுமலவூரிற் கவுணியன்
ஞானசம்பந்த னலமிகுபாட லிவைவல்லார்
வானசம்பந்தத் தவரொடுமன்னி வாழ்வாரே. மக

திருச்சிற்றம்பலம்.

---

திருநாவுக்கரசுசுவாமிகள் அருளிச்செய்த

திருச்சிராப்பள்ளி-திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

---

மட்டுவார்குழ லாளொடுமால்விடை
யிட்டமாவுகந் தேறுமிறைவனார்
கட்டுநீத்தவர்க் கின்னருளேசெயுஞ்
சிட்டர்போலுஞ் சிராப்பள்ளிச்செல்வரே. க

அரியயன்றலை வெட்டிவட்டாடின
ரரியயன்றெழு தேத்துமரும்பொருள்
பெரியவன்சிராப்பள்ளியைப்பேணுவா
ரரியயன்றெழ வங்கிருப்பார்களே. உ

அரிச்சிராப்பக லைவராலாட்டுண்டு
சுரிச்சிராதுநெஞ் சேயொன்று சொல்லக்கேள்
திருச்சிராப்பள்ளி யென்றலுந்தீவினை
நரிச்சிராதுநடக்கு நடக்குமே ௩

தாயுமாயெனக் கேதலைகண்ணுமாய்ப்
பேயனேனையு மாண்டபெருந்தகை
தேயநாதன்சி ராப்பள்ளிமேவிய
நாயனாரென நம்வினைநாசமே. ௪

திருச்சிற்றம்பலம்.

---

௨

சிவமயம்.

அறுபத்து மூன்றுநாயன்மார்களுள் ஒருவராகிய
ஐயடிகள் காடவர்கோன் நாயனார்
அருளிச்செய்த
திருச்சிராப்பள்ளி
க்ஷேத்திரத்திருவெண்பா.

---

திருச்சிற்றம்பலம்.

கழிந்ததுநென்னற்றுக் கட்டுவிட்டுநாறி
யொழிந்ததுடலிரா வண்ண—மழிந்த
திராமலையாகொண்டுபோ வென்னாமுன்னெஞ்சே
சிராமலையான் பாதமேசேர்.

திருச்சிற்றம்பலம்.

---

உ

சிவமயம்.

# புராணவரலாறு.

அரியதபோதனர்கள் வாசஞ்செய்யாநின்றதும், விலங்குகள், பறவைகள்முதலியன ஒன்றுக்கொன்று விரோதமின்றிச்சுகமாய் வாழாநின்றதுமான மகாபரிசுத்தம் பொருந்திய நைமிசாரண்யத்திலே ஒப்பற்ற ஓர் ஆச்சிரமமுண்டு. அவ்வாச்சிரமத்தின் அருகில் உள்ள மணற்பரப்பின்மீது தோன்றிய ஓர்விருக்ஷத்தின் நிழலிலே நவமணிகளிழைத்த திவ்விய வேதிகையின்பேரில் அழகிய புலித்தோலாசனத்தில் வேதோத்தமராகிய கௌதமமுனிவர் தமது திருமேனியில் திருநீறுதுலங்கவும், ஜடமுடியிலும், கண்டத்திலும், மார்பிலும், புயங்களிலும், கைகளிலும், உருத்திராக்ஷமணிகள் விளங்கவும், மார்பில் முப்புரிநூல் ஒளிரவும், அரையில்காவிதோய்ந்த வஸ்திரமும், வெண்மையானகௌபீனமும் பிரகாசிக்கவும், இடதுகரத்தில் புத்தகமும், வலதுகரத்தில் சின்முத்திரையும், திருநாவில் பஞ்சாக்ஷரமும் பொலியவும், இருவினையொப்பும், மலபரிபாகமுமுள்ளமுமுட்சுக்களாகிய ரிஷிக்கூட்டங்களும், முனிவர்குழாங்களும் இருமருங்கினும் நின்றுஸ்துதிசெய்யவும் வீற்றிருந்தனர்.

அப்போது அருந்தவசிகளாகிய மதங்கமாரிஷி அனந்தரிஷி, கௌசிகமுனிவர், பராசமுனிவர், காசிபமுனிவர், உரோமசன்முனிவர், புலத்தியமுனிவர், புலகமுனிவர், முதலானபலரிஷிகளும், முனிவர்களும் அக்கௌதமமுனிவரைச் சாஷ்டாங்கநமஸ்காரஞ்செய்து, அஞ்சலியஸ்தர்களாய்நின்று வேதமாகியபசுங்கொடித்தாவிப்படருகின்ற செழுங்கொம்பே! சிவாகமத்தினதுவேரே! ஞானமாகியவிருக்ஷமே! பரபோகமாகியதேன்நிறைந்த தெவிட்டாதகனியே! சதானந்தமுனிவரென்னும்மாணிக்கத்தைப்பெற்றமலையே! சற்

குணம்பொருந்தியகௌதமமுனிவரே! என்றுபலவாறுஸ்துதித்துத் தேவரீர் அடியேங்களுக்கு அருளிச்செய்த பழமையாகிய சிவ புராணங்களிலுள்ள திவ்யசரித்திரங்களைக் கேட்டுப் பேரானந்த மடைந்தோம். ஸ்ரீகயிலாயபதியானவர் திருமலைக்கொழுந்தராய் எழுந்தருளிச்சகல ஆன்மாக்களுக்கும் அனுக்கிரகஞ்செய்தருளா நின்ற திரிசிராமலைமான்மியமென்னும் செவ்வந்திப்புராணத்தை அடியேங்களுக்குத் திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று பிரார்த் திக்கக் காருண்ணியமூர்த்தியாகிய கௌதமமுனிவர் திருவுளங் கொண்டு மொழிந்ததாவது:— நீங்கள் கேட்கவிரும்பிய செவ்வந் திப்புராணத்தை ஸ்ரீசிவசுப்பிரமணியக்கடவுள் சனற்குமாரமுனி வருக்கு அருளிச்செய்தனர். அதைச்சனற்குமாரமுனிவர் எமக்கு அனுக்கிரகித்தவண்ணம் யாம் உங்களுக்குத்தெரிந்தமட்டும் கூறு கின்றோம். நீங்கள்மிகவும் பயபக்தியோடுகேட்கக்கடவீர்களென்று திருவருளைச்சிந்தித்துச் சொல்லத்தொடங்கினர்.



சிவமயம்.

# க. வது-திருமலைச்சருக்கம்.

கேளுங்கள் முனிவர்களே சிவசொரூபமாய் விளங்காநின்ற திரிசிராமலைமான்மியத்தை உண்மையாய் உணர்ந்தவர்களுக்கு அறம், பொருள், இன்பம், வீடு என்கின்ற நான்குபுருஷார்த்தங்களும் மெய்ஞ்ஞானமும் சித்திக்கும். அப்புராணமானது ஜனனமாகிய இருளைப்போக்குவதற்கு ஞானசூரியனுகவும், கொடியபாவம் என்னும் பஞ்சாகிய பெருமலைக்குச் செந்நிறம்பொருந்திய நெருப்பாகவும் இருக்கும். அளகாபுரிக்கு ஒப்பான அந்தத்திருச்சிராப்பள்ளி என்னும் திவ்யஸ்தலத்துக்கு இணையானது மண்ணுலகங்களிலும், விண்ணுலகங்களிலும் வேறு உண்டென்று சொல்லக்கூடுமோ! மூர்த்தி, தலம், தீர்த்தம் இவைகளின்பெருமை அந்தஉத்தமமாகிய தலத்திலே அல்லாதுவேறு எத்தலங்களிலும்இல்லை. அப்பதியைமனதினுலே நினைத்தபேருக்குத் தெய்வலோகபதவியும், அதைத்தரிசித்தோருக்குப் பிரமதேவருடைய பதவியும், அதில் எப்போதும் வசிப்போருக்கு மகாவிஷ்ணுவினது பதவியும் உண்டாகும். அதில்பிறந்தவர்கள் உருத்திரமூர்த்தியைப்போல் வாழ்ந்திருக்கலாம். அத்தலத்தில் ஒருசிவனடியாருக்கு அன்னங்கொடுத்தால் கன்னமதம்பொருந்திய வெள்ளையானையையுடைய தேவேந்திரனைப்போல ஏழுலகங்களையும் ஆளலாம். சுவர்னதானம், பூதானம் முதலானதானங்களைச் செய்வோருக்கு அரிதாயுள்ள எல்லாப்பொருள்களும் சித்திக்கும். அப்பதியில்ஒருசிவனடியார் இருக்கும்படி இடங்கொடுத்தால் தேவர்களாகிச் சுவர்க்கலோகத்தில்வசிப்பார்கள். இரண்டுபேருக்குஇடங்கொடுத்தால் தேவேந்திரனுகவாழ்வார்கள். அடியார்கள் வசிக்கவும், அவர்கள்சிவபூஜைபண்ணவும், இளைப்பாறவும் அன்பாய்த் திருமடங்கட்டுவித்தோர்கள் சிவசொரூபமாவார்கள். வேதங்களும் தரிசித்துவணங்கப்

பெற்ற திரிசிராமலைப்புராணத்தின் பொருள்களைவிரித்துச்சொல் வோரும், அவைகளைக்கேட்போரும்ஐராவதம்என்னும்யானையை வாகனமாக உடைய தேவேந்திரனைப்போல எல்லா உலகங்களை யும் அரசாக்ஷிசெய்வார்கள். தீவினைகளினின்றும் நீங்குவார்கள். சகலகீர்த்திகளையும் அடைவார்கள். துன்பம்பொருந்திய பிணிகளி னின்றும் விடுபடுவார்கள். பகைகளையும் வெல்லுவார்கள். சற் புத்திரர்களையும் பெறுவார்கள். இகத்துக்குமேலாகிய பரத்தில் சூரியன், சந்திரன், விஷ்ணு, பிர்மாமுதலியதேவர்களுக்கும் அரி தானபதவியையும் அடைவார்கள்.

ஊழிதோறும் வளராநின்றதும் எண்ணிறந்த பெருமைகளை உடையதும், வெள்ளி மயமாகியதுமான கயிலையங்கிரியை இருப்பிடமாகக்கொண்டவரும, உலகமாதாவாகிய ஸ்ரீஉமாதே வியாரை மருவுகின்றவரும், ஸ்ரீவிநாயகமூர்த்திக்கும், ஸ்ரீசுப்சுப் பிரமணியருக்கும் பிதாவானவரும், திருநந்திதேவர், திருஞான சம்பந்தமூர்த்திசுவாமிகள், திருநாவுக்கரசுசுவாமிகள், சுந்தர மூர்த்திசுவாமிகள், மாணிக்கவாசகசுவாமிகள் முதலான மெய் யடியார்களது பத்திக்குத் திருவுளமிரங்கி அவர்கள்முன் பிர சன்னமாகி கருணைமாரி பொழிந்தவரும், முற்கூறிய ஞானசம்பந் தாதிகள் திருவாய்மலர்ந்தருளிய தேவாரம், திருவாசகம் முதலிய திருவருட்பாக்களைத் தமது பொற்பாதகமலங்களில் அன்புகூர்ந்து என்புருகிப் பாடுகின்றோர்களுடைய மும்மலங்களை நீக்கி இன்ன ருள்புரிகின்றவரும், சகலஅண்டங்களிலுள்ளமால், அயன், இந்திரன் முதலியதேவர்களுக்கும், யானைமுதல் எறும்பீறாகஉள்ள ஆன்ம கோடிகளுக்கும் பரமபிதாவாக எழுந்தருளி ரக்ஷிக்கின்றவருமான அகண்டபரிபூரண சச்சிதானந்தஸ்வரூபராகிய ஸாக்ஷாத் ஸ்ரீகயி லாயபதியைத்தரிசிக்கும்பொருட்டுப்பிர்மா, விஷ்ணு, தேவேந்திரன் முதலான அஷ்டதிக்குப்பாலகர்கள், மருத்துவர்கள், அஷ்டவசுக் கள், சந்திர சூரியாதிகள், சித்தர்கள், சாரணர்கள், வித்தியாதரர் கள், உருத்திரர்கள், தேவர்கள், ஆதிசேஷன் முதலானவர்கள் அத்திருக் கயிலாயமலையின் திருக்கோபுரவாயிலை அடைந்து உயர்வுபொருந்திய மழுவையும், மானையும் தமது கரங்களில் தரித்

து, உடைவாளை அரையிலேகட்டி சிவந்தகையிலே வெள்ளிப் பிரம்பை ஏந்திக்கயிலைமலையைக் காத்தருளுகின்ற நந்தியெம்பெரு மானுடைய அனுமதிபெறும்வண்ணம் காத்திருந்தபோது சப்தபு வனங்களை ஓர்புஷ்பமாகச் சிரசில் தரித்திருக்கின்ற ஆதிசேஷனைக் கண்டு எல்லோரும் வணங்கி அவனது பெருமைகளைப் புகழ்ந்து கொண்டாடினார்கள். சகல உயிர்களிடத்திலும் கலந்திராநின்ற வாயுவானவன் அவைகளைக் கேட்டுப்பொறாமைகொண்டு அவர் கள்செய்த புகழ்ச்சிக்குமாறாக இகழ்ச்சிசெய்தான். உடனே ஆதி சேஷன்வாயுவை நோக்கி வாயுவே! நீதேவர்களுக்கு முன்பாக உன்னுடைய வெற்றிகளைச்சொன்னாய். உன்னையான்விழுங்கினால் நீபிழைக்கும்வழி ஒன்றுமில்லை என்று உன்னைவிடுத்தேன். இருக் கட்டும் யான் இக்கயிலைமலையைச்சுற்றி எனது உடலினாலேமறைப் பேன். உன்னுடைய வலிமையினாலே அக்கட்டு நெகிழும்படி செய்வாயா! பார்ப்போம் என்றுசபதங்கூறிக்கொண்டு அனேகம் கொடுமுடிகளை உடைய திருக்கயிலாயமலையை ஆயிரம்படங்களை உடைய தனது பெரியஉருவத்தினால் காற்றுநுழைவதற்கு இடை வெளியில்லாமல் கற்பகவிருக்ஷத்தைச்சுற்றிப்படரும் பெருங்கொ டிபோலவும், நாயகரை முழுஅன்போடுதழுவுகின்ற மங்கையரைப் போலவும் வளைத்து மறைத்துக்கொண்டான். தேவர்கள், அஷ்ட திக்குப்பாலகர்கள் முதலானவர்களும் தரிசனத்துக்குச் சென்றார் கள். பின்புவாயுவானவன் தனதுமுழுபலத்தோடு திருக்கயிலாய மலையைவந்து மோதினான். அப்போது பூமியிலுள்ள மலைகள் எல்லாம் சிறகுகளை உடையனபோல் பறந்தன. தருக்கள் எல்லாம் கற்பகவிருக்ஷங்களைப்போல் ஆகாயத்தில் தோன்றின. பூமியைத்தாங்குகின்ற அஷ்டமாநாகங்களும், அஷ் கஜங்களும் வலிகுன்றிஇளைப்புற்றன. அஷ்டகுலபர்வதங்கள் அஷ் டதிக்குகளிலும் போய்ச்சுற்றின. சப்தமேகங்களும், சப்தசமுத் திரங்களும், வளைந்திராநின்றபெரும்புறக்கடலும் வற்றிப்போயின. புவனங்களின் கூட்டங்களாகிய அடுக்குகள் அழிந்தன. நக்ஷத்தி ரங்கள் பொறிகளைப்போல் சிதறின. அமிர்தத்தை உடையசந்தி ரனானவன் குறைந்து வெறுந்தட்டினைஒத்தனன். சூரியனானவன் திசைமாறிப் பிரகாசம் குன்றினன். இவ்வாறு வாயுவானவன்

உலகம் யாவும்துன்பத்தையும், நாசத்தையும் அடையும்படிதனது வலிமையால் பலமுறைவந்துதாக்கியும்சிறப்புப்பொருந்திய கயிலைமலையும், ஆதிசேஷனது சரீரமும் பெரியோர்களது மனம்போலச் சிறிதும் அசையாதிருந்தன. இவ்விதமாய் ஆதிசேஷன் வெற்றி அடைந்திருத்தலைப்பார்த்து வாயுவானவன் மிகவும் நாணத்தையும், தளர்ச்சியையும் அடைந்து உலகத்திலுள்ள உயிர்களை எல்லாம் பற்றிக்கொண்டுபோய்ப் பாதாளலோகத்தில் புகுந்துகொண்டான். அப்பொழுது பூமியிலுள்ள ஜீவகோடிகள் அனைத்தும் சித்திரங்கள்போல் அசைவற்றிருந்தன. சர்வஞ்ஞராகிய சிவபெருமான் ஆன்மகோடிகள்படுகின்ற துன்பங்களை அறிந்து ஆதிசேஷனைத் திருக்கண்சாத்தி "சேஷனே! யாமெழுந்தருளி இராநின்ற இக்கயிலை மலையை உனதுவிசாலம்பொருந்திய படங்களினால் மறைத்திருப்பவைகளைச் சிறிது வாங்கிச் சிலவற்றை வாயுவால் அசைத்திடும்படி சற்று இடங்கொடுப்பாய்" என்று கட்டளையிட்டு அருள ஆதிசேஷனும் அவ்வாறுசெய்தனன்.

பின்பு வாயுவானவன் மகிழ்வுற்று கயிலாயத்தின் மூன்று கொடுமுடிகளைப்பறித்துத் தென்றிசையில் விழும்படி சிதறினன். அவைகளில் முதல்விழுந்த சிகரத்தைத் திருக்காளத்திமலை என்றும், அதின்பிறகு விழுந்த சிகரத்தைத் திரிசிராமலை என்றும், அதின்பின்விழுந்த சிகரத்தைத் திருக்கோணாசலம் என்றும், கூறி இம்மூத்தலங்களையும் ஸ்ரீதக்ஷணகயிலாயம் என்றும் அவைகளில் ஸ்ரீகயிலாயபதி திருமலைக்கொழுந்தாராய் எழுந்தருளினார் என்றும் பெரியோர்கள்சொல்லுவார்கள். தேவர்கள், அஷ்டதிக்குப்பாலகர்கள் முதலானவர்கள் ஸ்ரீகயிலாயநாதனைத்தரிசித்து விடைபெற்று அவரவர்களுடைய உலகங்களுக்குச் சென்றார்கள். அந்தத்திருக்காளத்திமலைக்கும், திருக்கோணமாமலைக்கும் மத்தியில் உள்ள திரிசிராமலையானது மேலாகிய கடுநாயக மணிபோலும் விளங்கிக்கொண்டிருக்கும். ஒருகாலத்தில் மந்தரகிரியானது பாற்கடலில் மத்தாகச்சுழன்றது. விந்தகிரியானது பூமியினுள்ளே புதைந்தது. மகமேருகிரியானது வில்லாகவளைந்தது. நாசரகிதமான அந்தத் திரிசிராமலையோ! ஊழிதோறும் வளராநின்றது.

அந்த உத்தமஸ்தலத்தில் திருமலைக்கொழுந்தராய் விளங்கும் ஸ்ரீகயிலாயபதியானவர் தம்மைப்பூஜித்து வந்தபிர்மா, அகஸ்தியர், தேவேந்திரன், உமாதேவியார், சப்தமாதர்கள், சப்தரிஷிகள், ஜடாயு, சித்தர்கள், சாரணர்கள், திரிசிரன், ஸ்ரீராமர், அர்ச்சுனன், அனுமான், சூரவாதித்தன், நாககன்னியர்கள், சாரமாமுனிவர், இரத்தினாவதி என்கின்ற செட்டிப்பெண் முதலானவர்களுக்குப் பிரசன்னராகி அவரவர்கள்விரும்பிய வரங்களையும், சித்திகளையும், முத்திகளையும் கொடுத்தருளினர். ஆதலால் அத்திவ்யசரித்திரங்களையாம் சொல்லுவோம். முனிவர்களே! நீங்கள் மிகவும்ஸ்ரத்தையோடு கேட்கக்கடவீர்களெனக் கௌதமமுனிவர் மொழியலுற்றார்.

உ

சிவமயம்.

# உ. வது-பிரமதேவனசத்தியந்தீர்ந்த சருக்கம்.

கேளுங்கள் முனிவர்களே முன்னாளிலே ஒருகாரணத்தால் உருத்திரமூர்த்தியும், நாரணரும், பிரமரும் ஆகியமும்மூர்த்திகளும் ஓரிடத்தில் எழுந்தருளியிருந்தார்கள். அப்போதுநாரதர் அங்குசென்று அம்மூவரையும் பொதுவிலே வணங்கி இப்போது நான் வணங்கியது இம்மும்மூர்த்திகளில் பெரியவர்க்கு என்று சூழ்ந்திருந்த தேவர்களும், முனிவர்களும்மயங்கும்படி சொல்லிப்போயினர். பின்பு பிர்மா, விஷ்ணு இருவரும் ஒருவருக்கொருவர் நான்பெரியவன் நான்பெரியவன்என்று வாக்குவாதம்பேசி உலகங்கள்யாவும் நடுங்கும்படி பலயுகங்களாகப் போர்செய்துவந்தனர் அப்போது பரங்கருணைத்தடங்கடலாகிய சிவபரஞ்சோதியானவர்

உலகம் யாவும்துன்பத்தையும், நாசத்தையும் அடையும்படிதனது வலிமையால் பலமுறைவந்துதாக்கியும்சிறப்புப்பொருந்திய கயிலை மலையும், ஆதிசேஷனது சரீரமும் பெரியோர்களது மனம்போலச் சிறிதும் அசையாதிருந்தன. இவ்விதமாய் ஆதிசேஷன் வெற்றி அடைந்திருத்தலைப்பார்த்து வாயுவானவன் மிகவும் நாணத்தையும், தளர்ச்சியையும் அடைந்து உலகத்திலுள்ள உயிர்களை எல்லாம் பற்றிக்கொண்டுபோய்ப் பாதாளலோகத்தில் புகுந்துகொண்டான். அப்பொழுது பூமியிலுள்ள ஜீவகோடிகள் அனைத்தும் சித்திரங்கள்போல் அசைவற்றிருந்தன. சர்வஞ்ஞராகிய சிவபெருமான் ஆன்மகோடிகள்படுகின்ற துன்பங்களை அறிந்து ஆதிசேஷனைத் திருக்கண்சாத்தி" சேஷனே! யாமெழுந்தருளி இராநின்ற இக்கயிலை மலையை உனதுவிசாலம்பொருந்திய படங்களினால் மறைத்திருப்பவைகளைச் சிறிது வாங்கிச் சிலவற்றை வாயுவால் அசைத்திடும்படி சற்று இடங்கொடுப்பாய்" என்று கட்டளையிட்டருள ஆதிசேஷனும் அவ்வாறுசெய்தனன்.

பின்பு வாயுவானவன் மகிழ்வுற்று கயிலாயத்தின் மூன்று கொடுமுடிகளைப்பறித்துத் தென்திசையில் விழும்படி சிதறினன். அவைகளில் முதல்விழுந்த சிகரத்தைத் திருக்காளத்திமலை என்றும், அதின்பிறகு விழுந்த சிகரத்தைத் திரிசிராமலை என்றும், அதின்பின்விழுந்த சிகரத்தைத் திருக்கோணாசலம் என்றும், கூறி இம்மூத்தலங்களையும் ஸ்ரீதக்ஷணகயிலாயம் என்றும் அவைகளில் ஸ்ரீகயிலாயபதி திருமலைக்கொழுந்தராய் எழுந்தருளினார் என்றும் பெரியோர்கள்சொல்லுவார்கள். தேவர்கள், அஷ்டதிக்குப்பாலகர்கள் முதலானவர்கள் ஸ்ரீகயிலாயநாதரைத்தரிசித்து விடைபெற்று அவரவர்களுடைய உலகங்களுக்குச் சென்றார்கள். அந்தத்திருக்காளத்திமலைக்கும், திருக்கோணமாமலைக்கும் மத்தியில் உள்ள திரிசிராமலையானது மேலாகிய நடுநாயக மணிபோலும் விளங்கிக் கொண்டிருக்கும். ஒருகாலத்தில் மந்தரகிரியானது பாற்கடலில் மத்தாகச்சுழன்றது. விந்தகிரியானது பூமியினுள்ளே புதைந்தது. மகமேருகிரியானது வில்லாகவளைந்தது. நாசரகிதமான அந்தத் திரிசிராமலையோ! ஊழிதோறும் வளராநின்றது.

அந்த உத்தமஸ்தலத்தில் திருமலைக்கொழுந்தராய் விளங்கும் ஸ்ரீகயிலாயபதியானவர் தம்மைப்பூஜித்து வந்தபிர்மா, அகஸ்தியர், தேவேந்திரன், உமாதேவியார், சப்தமாதர்கள், சப்தரிஷிகள், ஜடாயு, சித்தர்கள், சாரணர்கள், திரிசிரன், ஸ்ரீராமர், அர்ச்சுனன், அனுமான், சூரவாதித்தன், நாககன்னியர்கள், சாரமாமுனிவர், இரத்தினவதி என்கின்ற செட்டிப்பெண் முதலானவர்களுக்குப் பிரசன்னராகி அவரவர்கள்விரும்பிய வரங்களையும், சித்திகளையும், முத்திகளையும் கொடுத்தருளினர். ஆதலால் அத்திவ்யசரித்திரங்களையாம் சொல்லுவோம். முனிவர்களே! நீங்கள் மிகவும்ஸ்ரத்தையோடு கேட்கக்கடவீர்களெனக் கௌதமமுனிவர் மொழியலுற்றார்.

உ

சிவமயம்.

# உ. வது-பிரமதேவனசத்தியந்தீர்ந்த சருக்கம்.

கேளுங்கள் முனிவர்களே முன்னாளிலே ஒருகாரணத்தால் உருத்திரமூர்த்தியும், நாரணரும், பிரமரும் ஆகியமும்மூர்த்திகளும் ஓரிடத்தில் எழுந்தருளியிருந்தார்கள். அப்போதுநாரதர் அங்குசென்று அம்மூவரையும் பொதுவிலே வணங்கி இப்போது நான் வணங்கியது இம்மும்மூர்த்திகளில் பெரியவர்க்கு என்று சூழ்ந்திருந்த தேவர்களும், முனிவர்களும்மயங்கும்படி சொல்லிப் போயினர். பின்பு பிர்மா, விஷ்ணு இருவரும் ஒருவருக்கொருவர் நான்பெரியவன் நான்பெரியவன்என்று வாக்குவாதம்பேசி உலகங்கள்யாவும் நடுங்கும்படி பலயுகங்களாகப் போர்செய்துவந்தனர் அப்போது பரங்கருணைத்தடங்கடலாகிய சிவபரஞ்சோதியானவர்

அவ்விருவருடைய மயக்கத்தை நீக்கும்பொருட்டு அவ்விடத்தில் யாவராலும் அடிமுடியைக்காணுதற்கரிய ஓர் அக்கினிலிங்கமாகத் தோன்றினதை, அவர்கள் இருவரும்கண்டுபயந்து இதுஎதென்றுவி யந்து இதின்அடிமுடியைக் காண்கின்றவர்களே பெரியவரென்று சொல்லி இருவரும்யுத்தஞ்செய்தலையொழித்து விஷ்ணுவானவர் பன்றிவடிவமாகி அந்தச்சிவலிங்கத்தினது அடியையும், பிர்மதேவர் அன்னவடிவமாகி அதின் முடியையும் காணும்படி சென்றார்கள். மூவுலகங்களையும் ஓரடியாக அளந்தமகாவிஷ்ணுவானவர் கீழே ஏழுலகங்களிலும் போய்த்தேடியும் அதின் பாதத்தைக்காணமல் தமது கொம்புகளும் தேய்ந்து, சோர்ந்து வந்து சேர்ந்தனர். எல்லா உலகங்களையும் படைக்கின்ற பிர்மதேவர் மேலே ஏழுல கங்களிலும் பறந்துபோய் அதின்சிரசைக்காணமல் தமது சிறகு களும்உதிர்ந்து மிகவும் தளர்ச்சி அடைந்து, நடுக்கடலில் அகப் பட்டமானுமியைப்போல் திகைத்துக் கொண்டிருந்தனர்.

அப்போது பெரியமடலை யுடையதாழம் பூவானது ஆகாயத் திலிருந்து வருதலைக்கண்டு அன்னவடிவமாகிய பிர்மதேவர் அதி னிடத்திற் பறந்துபோய்த் தாழம்பூவே நீஎங்கிருந்து வருகின்றாய்? என்று கேட்கத் தாழைமடலானது நான் சிவபெருமானுடைய பொன்மயமானதிருமுடியில் வாசனையோடு தங்கியிருந்து தவறி விழுந்தேன். நான் அவரைப் பிரிந்து வந்து வெகுகாலமாய் விட்டது. இதுவேஎனது வரவின் முறைஎன்று பின்னும் சொல் லுகின்றது. சிறகுஇழந்த அன்னமே நீயார்? உன்வரவுயாது? நீ என்னைத்தடைசெய்தது யாதுகாரணம்? என்றுவினவ, பிர்மதேவர் சொல்லுவார். நான் சர்வலோகங்களையும் உண்டுபண்ணுகின்ற பிர்மதேவனுக்கும். நீண்டகாலமாய் நானும், விஷ்ணுவும் நான்பெ ரியவன், நான்பெரியவன் என்று ஒருவரோடொருவர் யுத்தஞ் செய்யும்போது தோன்றிய இந்தஅக்கினி உருவமான ஜோதிலிங் கத்தினது ஆதியையும், அந்தத்தையும் காண்பவரே பெரியவர் என்று சொல்லி நான் இந்த அன்னவடிவமாகி இதின் உச்சியைக் காணும்படி தேடியும் காணமல் உன்னைக்கண்டேன். விஷ்ணுவா னவன் வராகவடிவமாகி இதின் வேரைக் காணும்பொருட்டுப்

பாதலத்தில் சென்றனன். அளவில்லாத இந்தப்பெரிய அக்கினிஸ் தம்பத்தின் முடிவு எவ்வளவு உள்ளது, அதையான் அறியும்வழி ஒன்றுசொல்வாய் எனத்தாழையானது நீர்சொன்னது நன்றாயி ருக்கின்றது. நீர் இவ்வளவுகாலம், இவ்வளவுதூரம், இவ்வளவு பிர யாசையோடு பறந்துவந்தவழி ஓரணுவளவாகும். இனிமேல் செல்லாநின்ற வழி மலையின்அளவாயிருக்கும். நீர்திரும்புவதே காரியமாகும். அவ்வழியைச் சொல்லவேண்டுமானால் மனதுக் குங்கூட எட்டாததாயிருக்கும். சுத்தவித்தை, ஈசுரம், சாதாக் கியம் எனமூன்றுதத்துவங்கள் இனியுண்டு. அவைகளுக்குமேல் சதாசிவனார் வீற்றிருப்பர். ஒளி உருவமாகிய இந்தச்சிவலிங்கமே சதாசிவமூர்த்தியினது வடிவமாகும். ஆதியந்தமில்லாத இந்த அரும்பெருஞ்சோதியைத் தற்போதம் இழந்த மகான்கள் சிவனரு ளால் எளிதாய்க் காண்பார்கள். நானென்னும் செருக்குடைய உமக்கும், உம்மைப்பெற்ற நாரணருக்கும் அம்முடியையும், அடி யையும் காண்பது மிகஅரிதாகும். ஆகையால் நீர்மேலே செல் லாதுதிரும்பும் என்றுசொல்லப் பிர்மா துக்கசாகரத்தில் மூழ்கிப் பெருமூச்செறிந்து பின்னும்சொல்லுவார். வாசனைபொருந்திய தாழம்பூவே சிவபெருமானது திருமுடியைப் பிர்மதேவர்கண்டார் என்றுவிஷ்ணுவுக்குவந்து ஓர்வார்த்தை சொல்வாய் என்றுமிகவும் பிரார்த்திக்கத் தாழம்பூவும், அதற்கு உடன்பட்டது. பின்பு பிர் மா தாழைமடலை அழைத்துக்கொண்டு அயர்ந்து கிடக்கின்ற மகா விஷ்ணுவினிடத்திற் சென்று விஷ்ணுவே யான் ஒருநொடியளவில் லக்ஷங்காதம்பறந்துபோய் ஆதிபகவனது திருமுடியைக்கண்டேன் அதற்குச்சாக்ஷி இத்தாழம்பூஎன; அத்தாழையும் நிஜந்தான் பிர்ம தேவர் பார்த்தார் என்றுசொல்லியது. உடனே அக்கினிமலை யானது அண்டகடாகங்களெல்லாம் நடுங்கும்படி படீரென்று வெ டித்தது. முப்புரத்தை எரித்தமூலகாரணராகிய சிவபெருமான் அதில நின்றுவெளிப்பட்டுப் "பிர்மனே நீ உன்னுடைய ஆணவத் தால் சொன்னசொல் நன்றாயிருக்கிறது" என்றுநகைத்தபோது அண்டபகிரண்டங்கள் யாவும் கிடுகிடென்று நடுங்கி ஒடுங்கிப்போ யின. தேவர்கள் முதலானவர்கள் பிர்மதேவர் இன்றே அழிந்து போவார் என்றுபயந்தார்கள். மிகவும் நடுங்கிஒடுங்கி நிற்கின்ற பிர்மாவைப் பார்த்துச் சாம்பமூர்த்தியானவர் கோபங்கொண்டு

"சதுர்முகனே நீ நமதுமுடியைக் கண்டதாகப்பொய்சொன்னபடி யால் உனக்கு இன்றுமுதல் பூமியின்கண் சிருஷ்டித்தொழிலும், கோவிலும், பூஜையும் இல்லாமற்போகும்படிசெய்தோம். வாராய் தாழம்பூவே நீ இந்தப்பிர்மனோடுசேர்ந்து பொய்சாக்ஷிசொன்னப டியால் நீ எனக்கு உபயோகம் ஆகாமல் முள்ளுருவாய்ப்போகக் கடவாய்" என்று திருவுளம்பற்றினர். உடனே பிர்மா சுவாமியி னுடைய திருவடிகளைத்தொழுது எனதுபிதாவேவந்தனம்; மாசில் லாதவனேவந்தனம்; எட்டுக்கையை உடையவனேவந்தனம்; கால காலனாகியகர்த்தனேவந்தனம்; சோதிமயமானவனேவந்தனம்; வி மலனாகியபரிசுத்தனேவந்தனம்; பொய்யருக்குப்பொய்யனேவந்த னம்; புண்ணியப்பொருளே வந்தனம்; கங்கையைஅணிந்தஜடை யைஉடையவனேவந்தனம்; அடியவருக்கெளியவனே வந்தனம்; அழகிய ரிஷபக்கொடியை உடையவனே வந்தனம்; இருவினை த விர்ப்பவனேவந்தனம்; பெருமைபொருந்திய ஆபரணமாகச்சர்ப்பங் களைத்தரிப்பவனேவந்தனம்; வேலாயுதக்கடவுளுக்குப் பிதாவே வந்தனம்; திருநீறு அணிந்திராநின்ற அமலனேவந்தனம்: நின்ம லனே வந்தனம். என்றுபலவாறாக ஸ்தோத்திரங்கள் செய்தனர். பரமசிவம் திருவுளமிரங்கி "வாராய் நான்முகனே வேதங்களால் புகழப்பட்ட ஸ்ரீதெக்ஷணகயிலாயத்தில் சென்று நம்மைவணங்கி ஞல் நீ பொய்சொன்னதோஷம் உன்னைவிட்டு நீங்கும்என்றும், அ தை அடைந்தபேருக்கு முன்புள்ளதீவினைகள் விலகிநல்லகதிஉண் டாகும்" என்றும் அருளிச்செய்தும், தமதுசரணாகதியைஅடைந் துஸ்தோத்திரஞ்செய்யாநின்றமகாவிஷ்ணுவுக்குக்கிருபைசெய்தும் அந்தரத்தானமானூர். தேவர்களும் புஷ்பமாரி பொழிந்தனர்கள்.

கேளுங்கள் முனிவர்களே அந்தத்தெக்ஷணகயிலையின் நான்கு எல்லைகள் அரையோசனைதூரமாகும். அதுபூமியில் புதைந்திருப் பது மூன்றுயோசனை தூரமாகும். அதின் உயர்ச்சி ஒருயோசனை தூரமாகும். அம்மலையை அங்கப்பிரதக்ஷணம் செய்வோர் தங்கள் சரீரத்தில் படிந்த ஒவ்வொரு தூசிக்கும் அனேககாலம்அழியாமல் சிவபதவியில் இருப்பார்கள். அதைவலம்செய்வோர்களுக்கு ம ஹைஸ்வர்யமாகிய லட்சுமிகரங்களும், அஷ்டமாசித்தியும், அரிய முத்தியும் உண்டாகும். அதைவலம்செய்யவேண்டுமென்றுநினைத்

துப் பூமியில் ஒருகாலை ஊன்றினால் சாயுச்சியபதவியை அடைய லாம். அதை அன்போடு பிரதக்ஷணம் செய்வோர்களுக்குப்பர கதிதானே உண்டாகும். அம்மலையில் சரிதை, கிரியை, யோகம், ஞானம் என்கின்றபதவிகளில் முறையாகப்பயில்கின்ற தவத்தை யுடைய மாதவர்கள் அனேகருளர். ஊசிகளின்மேல் கால்களை ஊன்றி ஊண், உறக்கம், விருப்பு, வெறுப்புமுதலியவற்றை விட்டு மூக்கின் நுனிகளில் கண்களைநாட்டி, பஞ்சாக்கினியை மூட்டி, மௌனமாகி ஞானவாரிதியில் மூழ்கிச் சிவனடியின்யாச்சிந்தையு டைய தவசிகள் அனேகருளர். மலையைச்சுற்றிலும்தேன் ஒழுகா நின்ற பாதிரி, குருந்து, கோங்கு, மா, பலா, சந்தனம்முதலிய வி ருக்ஷசாதிகளை உடையவனங்களும், தேவர்கள்கற்பக விருக்ஷத்தி னது மலரினும்மேலானதென்று விருப்பத்துடனே சூடுகின்ற நல் லவாசனைபொருந்திய பூக்களை உடைய நந்தனவனங்களும், புஷ் பதடாகங்களும் அனேகம் உண்டு. சிங்கம், யானை, புலி, பசு, முதலியமிருகங்கள் ஒன்றுக்கொன்றுவிரோதமின்றிவாழும். வனங் களிலுள்ள வானரங்கள் மதுரமான கனிகளைத்தின்றும், தேனைப் பருகியும் செருக்குற்றிருக்கும். அம்மலையின் உச்சியில்ஆகாயகங் கையானது பொருந்த அதனருகே இளம்பிறையானது தவழ்தல் திருமலைக்கொழுந்தாகிய இறையவர் சூடுகின்ற பெருமைபொருந் திய கங்கையும், சந்திரனும்போலவிளங்கித் தோன்றும்.

இவ்வாறு விளங்காநின்ற ஸ்ரீதெக்ஷணகயிலாயத்தைப் பிர்மதே வர் தரிசித்து வணங்கிப் பொற் குவியலைக்கண்ட தரித்திரனைப் போல் மிகக்களிப்படைந்து மேற்றுத்திசையிலுள்ள தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து மலையின் உச்சியில் வீற்றிருக்கின்றஉச்சிப்பிள்ளை யாரையும், குகையிலிருக்கின்ற ஸ்ரீசிவசுப்பிரமணியக் கடவுளையும், சிவபெருமான் திருமலைக்கொழுந்தாய் எழுந்தருளியகாலத்தில் அம்மலைக்குக்காவலாய் இருக்கும்படிகட்டளையிட்டருளிய சிவக ணங்களில் ஒருவராகிய தேசுமிக்காரையும் தொழுது, ஸ்ரீமட்டு வார்குழலம்மையையும்,ஸ்ரீதிரிசிராமலைநாதரையும்நானாவிதபுஷ்பங் களினால்அனுதினமும் அர்ச்சித்துக்கிரிப்பிரதக்ஷணம் பண்ணிச்சமீ பத்திலுள்ள ஓர்சிலையின்பேரில் இருந்து அரியதவத்தைச் செய்து வந்தனர். நெடியோனாலும் தேடுதற்கரிய சிவபெருமான் பிரிவற்

றஸ்ரீஉமாதேவியாருடன் விடையின்பேரில் ஆகாயத்தில்தோன்றி பிர்மனைநோக்கி "நினதுபெரியசாபத்தையும், நீபொய்சொன்ன தீவினையையும் நீக்கினோம். பூமியில் பிராமணர்களுக்குச் செய்கின்ற பூஜைகளை உன்பூஜையாகக்கொண்டு, முன்போல உலகங்களைச் சிருஷ்டிக்கக்கடவாய்" என்று அருளிச்செய்தனர்.

பிர்மா ஸ்ரீபரமசிவத்தைவணங்கி ஸ்தோத்திரங்கள்பண்ணிச் சுவாமி ஸ்ரீதெக்ஷணகயிலாயமாகிய இம்மலையும், யான்தவஞ்செய்து கொண்டிருந்த இச்சிலையும் என்பெயராகவே விளங்கவேண்டும். பொய்சொல்வதினால் உண்டாகின்றபாவங்களெல்லாம் இப்புண்ணியஸ்தலத்தை நினைப்போருக்கு நிவாரணமாகவேண்டும். சோமவாரமும்ரோகணி நக்ஷத்திரமுங் கூடியசுபதினத்தில் இத்தடத்தில் மூழ்கின்றவர்களுக்குக் கொடிய தீவினைகள் நீங்கவேண்டும். பங்குனிமாசம்முழுவதும் இதில் ஸ்நானஞ்செய்வோர்களுக்குப் பரகதி கொடுத்தருளவேண்டும். இதில் மூழ்கி நல்ல அறுகினாலும், மூன்று இதழ்களை உடைய வில்வபத்திரத்தினாலும் நினது திருவடிகளில் அர்ச்சனைபண்ணின பேர்களுக்குப் புத்திரபாக்கியமும், புகழும், மேன்மையும், சித்தியும், முத்தியும், சித்திக்கவும், இந்தத் தீர்த்தத்திற்குச் சோமரோகணி என்னும் நாமஞ்சூட்டவும் வேண்டும் என்று பிரார்த்திக்க அவ்வண்ணம் ஸ்ரீபரமசிவம் அவருக்கு அனுக்கிரகம் பண்ணி மறைந்தருளினார். பின்புபிர்மாபருவதத்தில் எழுந்தருளிய திருமலைக்கொழுந்தரைப் பலமுறை தொழுது வணங்கிஸ்துதிசெய்து விடைபெற்று மீண்டும் தமது உறைவிடமாகிய சத்தியலோகம் போய்ச்சேர்ந்தனர்.



உ

சிவமயம்

# ரு. வது-அகஸ்தியச்சருக்கம்.

கேளுங்கள் முனிவர்களே திரிநேத்திரதாரியாகிய சிவபெருமான் முன்பு ஓர் தினத்தில் இமயமலைச்சிகரத்தின் முகட்டிலே முனிவர்களுடனே எழுந்தருளியிருந்தபோது நாரதமுனிவரை நோக்கித் தென்றிசை உயர்ந்திருப்பது யாது காரணம் என்று வினவ, நாரதமுனிவர் சுவாமியைவணங்கி நின்று அடியேன் கன்னியாகுமரியில் ஸ்நானம்செய்யும்பொருட்டுத் தென்றிசையில் சென்றபோது விந்தமலையானது தனக்கு எந்தமலையும் நிகரில்லை என்று மந்தரகிரியைப்பகைத்து மற்றுள்ள மலைகளை இகழ்ந்து, இறுமாப்படைந்து, ஆகாயவெளிமுழுதும் மூடும்படி உயர்ந்து வளர்ந்து இருத்தலைக்கண்டேன். பெண்களுடைய மனதை அளவிட்டறியலாம். அம்மலையின் நிலைமையைச் சிறிதேனும் அளவிடப்படாது என்று சொல்லச் சிவபிரான் புன்னகைகொண்டு சமுத்திரத்தை உள்ளங்கையில் அடக்கிய அகஸ்தியமுனிவரைப் பார்த்து "அன்பனே இப்போது நாரதமுனிவன் சொல்லிய விந்தமலையின் கருவத்தை அடக்கும்பொருட்டுத் தென்றிசை நோக்கிச் செல்வாய்" என்று அருளக், குறுமுனியானவர் அரி, அயன், இந்திரனுக்கும் எட்டாத தலைவா; ஞானசமுத்திரத்தில் தோன்றிய அமுதமே, பெருமைபொருந்திய கிருபாநிதியே; தெய்வலோகத்தை உடையவரே; உமாதேவியார் இடப்பாகத்தில் பொருந்தியதேனே; மதுரமான ஆனந்தக்கனியே; வேதப்பொருளுக்கும் எட்டாத ஒப்பற்றவரே; தேவரீருடைய எட்டுபுயங்களினுடைய அழகையும், திருமுகத்தினது எழிலையும், திருநேத்திரங்களில் பொழிகின்ற கருணையையும் யான் தரிசித்துக்கொண்டிராமல் அடியேன் தேவரீரைப்பிரிந்து எங்ஙனம் உய்வேன் என்று தோத்திரங்கள்பண்ணித்

திருவடிகளில் வீழ்ந்து நமஸ்கரித்துநின்றனர். சிவபெருமான் இன்னருள்சுரந்து "அன்பனே நீ துன்பத்தைவிட்டொழி; நாம்உனக்குச் சொல்லியவண்ணம் நீ விந்தியபர்வதத்தைப் பாதலத்தில் அடக்கிச்சென்றால் அதற்குத்தென்றிசையில் விளங்கும் ஸ்ரீதெக்ஷணகயிலாயமாகிய திரிசிராமலையில் திருமலைக்கொழுந்தாய் எழுந்தருளி இருக்கும் நம்மைச்சிலநாள் தரிசித்துச் சந்தனவிருக்ஷங்களை உடைய பெரிய பொதியமலையில் சென்று இருக்கக்கடவாய்" என்று விடைகொடுத்தருளினர்.

அந்தப்பிரகாரம் சுவாமியினிடத்தில் அகஸ்தியமுனிவர் உத்தரவு பெற்றுக்கொண்டு ஆகாயமார்க்கமாய்ச்சென்று யாவரும் அஞ்சும்படி செருக்குற்று வளர்ந்திருக்கும் விந்தமலையைக்கண்டு பெரியமலைபோன்ற யானையை உரித்து அன்றுபோர்த்தருளிய சாம்பசிவத்தினது திருவடிகளை மனதில் தியானித்துக்கொண்டு அம்மலையின் உச்சியில் குதித்தனர். அந்த விந்தகிரியானது ஆதிசேஷன் இளைப்பாறும்படி பூமியைச் சுமப்பதுபோல் பாதலத்திற்போய் அழுந்தி மிகவும் வருந்தி அகஸ்தியமுனிவரை நோக்கி "யாசில்லாத மாமுனிவரே உமக்குத் தீங்குசெய்த வில்வலன் தம்பியாகிய வாதாவியும், கொடிய விருத்திராசுரனுக்கு இடங்கொடுத்த பெரியசமுத்திரமும், உமக்குக் கோபத்தை உண்டுபண்ணின நகுடனும் நான் அல்லவே. உமக்கு யான் அவர்களைப்போல என்ன குற்றஞ்செய்தேன்? என்னைக்கோபஞ்செய்த காரணம் யாது? இனி யான் வளர்ந்திடுங்காலம் எப்போது என்று பிரார்த்தித்துக்கேட்க, அகஸ்தியர் நீ மேருமுதலிய பருவதங்களைவிட பெரியவனென்று கருவங்கொண்டு வளர்ந்தபடியால் உன்னுடைய அகந்தையை அடக்கினோம். யாம் பொன்மயமான மேருவினிடத்துத் திரும்பிவருங்காலம் நீ வளருங்காலம் என்று அருளிச்செய்து தென்றிசையைநோக்கிச் சென்றபோது மேற்றிசையில் தோன்றிய நேரிமலையை, ஸ்ரீகயிலாயபதி தமது பெருவிரலால் இராவணனைப் பாதலத்தில் அடக்கியவிதத்தைப்போல் அடக்கினபின்னர் துஷ்டர்கள் தொலைந்தபின் விளங்காநின்ற மேலோர்களைப்போலவும், பாவம்போனபின் செழிக்கும் புண்ணியம்போலவும், வளராநின்ற திரிசிராமலையைக்கண்டு வணங்கினர்.

அதில் கவரிமான் மிருகங்கள் சஞ்சரித்தல் வரையர மகளிர் திரக்ஷியாய்த்திரு அலகு இடுதல்போலும் இருந்தன. அழகியமயில்கள் கரியமேகங்களைக்கண்டு சிறகுகளைவிரித்து ஆடுதல் வட்டமான தனங்களையுடைய வரையரமகளிர் ஆலவட்டங்கள்கொண்டு அசைத்தல்போலும் இருந்தன. வண்டினங்கள் குடைதலினாலுண்டாகிய பொடிகள் எழுகின்ற தாமரைமலர்களானவை சுனையில்தோன்றுதல் அழகுபொருந்திய நீரரமகளிர் பிடித்த வாசனைப்புகையுள்ள தூமகலசம்போலும் இருந்தன. வேடர்களாலேவிதைக்கப்பட்ட தினைகளும், பெரியமூங்கில்களால் தூவப்பட்ட முத்துக்களும், குறவருடையமுற்றத்திலுள்ள மலைநெற்குவியல்களும் சேர்ந்துமலையின்மேல் வளர்ந்த மலையைப்போல் இருந்தன. வண்டுகள் சூழும்படியாக மாணிக்க ரத்னப்பாறையில் மலர்ந்த கோங்கம் பூக்களும், மெல்லியகனிகளும் வீழ்ந்திருத்தல் அழகிய மாதர்களது கொண்டையில் நெருங்கிய செம்பொன்னாற்செய்த மணிகள்பதித்த ஆபரணங்களை ஒத்திருந்தன. மரகதப்பாறையின் மேல் நாகங்களால் கக்கப்பட்ட நாகரத்னங்கள் பிரகாசத்தை வீசுதல் பச்சிலைகள் நிறைந்தபொய்கையில் மலர்ந்திராநின்ற செவ்வாம்பல் புஷ்பங்களை ஒத்திருந்தன.

இவ்வாறு அகஸ்தியமுனிவர் திரிசிராமலையினுடைய பெருமைகளை எல்லாம்கண்டு களித்துச் சிவதீர்த்தத்தில்படிந்து கிரிப்பிரதக்ஷணம்பண்ணித் திருக்கோவிலிற்சென்று ஸ்ரீமட்டுவார்குழல் அம்மையையும் ஸ்ரீசிராப்பள்ளிச் செல்வரையும் தொழுதுவணங்கச் சிவபிரான் ரிஷபத்தின்பேரில் எழுந்தருளிவந்து அன்பனே நீ வேண்டுவதுயாதெனை, அகஸ்தியர் நீலகண்டராகிய கடவுளைத்தொழுதுநின்று மன்மதனை எரித்த விழியையுடையவனே வந்தனம்; உமாதேவியை ஓர்பாகத்தில் வைத்தருளிய மாணிக்க மணியே வந்தனம்; திருநீறு அணிகின்ற அழகியதோளிலே சிங்கத்தோலை அணிந்தருளிய பரம்பொருளே வந்தனம்; நீலநிறமானகண்டத்தை யுடையவனே வந்தனம். என்றுதாயைப்பிரிந்த கன்றுபோல் கதறி ஸ்தோத்திரங்கள்பண்ணி வட ஆலவிருக்ஷத்தில் அமர்ந்தருளிய தேவரீர் அடியேனுக்குப் பிரசன்னமாகித் தோன்றியது ஒன்றுமேபோதும். காமதேனுவின்பாலை உண்டபேர்

மற்றொன்றைப் புசிக்கவிரும்பார். ஆதலால் அடியேன் தேவரீரைத் தரிசித்த அளவில் என்மனதில் இருந்தகுறைகள் நீங்கின. இத்தலத்தில் எந்நாளும் இருந்து உம்மை பக்தியினால் பூஜித்தவர்களை ரக்ஷித்தருளவேண்டும். உம்மை எத்தலத்திலிருந்து நினைத்தபோதினும் அவர்களுக்குமுத்தியை அளிக்கவேண்டும் என்று பிரார்த்திக்கச் சிவபெருமான் அவர்கேட்டவரங்களை அருளிச்செய்து அந்தரத்தானமானார். பின்பு அகஸ்தியர் திரிசிராமலையைப்பிரதக்ஷணஞ் செய்து சாம்பமூர்த்தியினுடைய கட்டளையின்படி பொதியமலைக்கு எழுந்தருளினர்.

---

உ

சிவமயம்.

---

# ச. வது-இந்திரச்சருக்கம்.

---

கேளுங்கள் முனிவர்களே முன்னாளிலே சமுத்திரம்போல் திரண்ட அசுரர் சேனைகளையும், மிகவும் கொடிய செய்கைகளையும், நமனும் அஞ்சத்தக்க கருமையாகிய பெரியவுருவத்தையும், மகா பராக்கிரமத்தையும் உடைய செம்பன் என்னும் ஓர் அசுரன் இருந்தான். அவனை நினைத்தால் உடல்நடுங்கும். அவன்செய்து வந்த கொடுமைகளைச் சகிக்கமாட்டாமல் தேவர்கள் எல்லோரும் கூடித் தேவேந்திரனிடத்திற்போய் ஓலமிட்டார்கள். தேவராஜன் மகாவிஷ்ணுவினிடத்திற்சென்று முறையிட்டான். அவர் நீ அஞ்சாது யுத்தத்துக்குமுன்னே செல்வாய், நாம்படைத்துணையாக உனக்குப்பின்வருவோம் என்றுகூற, இந்திரன் திரண்ட இராணுவங்களோடு போர்க்களத்திற்சென்று படைத்தலைவராகிய மகாவிஷ்ணுவினுடைய உதவியால் தனது வச்சிராயுதமாகிய மலையை

மத்தாகக்கொண்டு, இராக்ஷதர்களாகிய சேனைசமுத்திரத்தைச் சேறுபடக்கடைந்து, அக்கடலில் உண்டாகிய ஜிணம்என்னும் அமுதத்தைப் பருந்துக்களும், பசாசுக்களும் ஆகியதேவர்கள் தெவிட்டி உண்ணும்படி அந்த அவுணனோடு பலமுறை சண்டைசெய்து வென்று அவனையும், மற்ற இராக்ஷதர்களையும்கொன்று தேவர்முதலானவர்களுடைய நெடியதுயரங்களைப் போக்கினன். அப்போது அசுரர்களென்னும் களைகள் நீங்கித் தேவர்கள் என்னும் பயிர்கள் ஓங்கிவளர்ந்தன.

அவ்வரக்கனைக் கொன்ற பழியானது உடனேவந்து தேவராஜனைப்பற்றி மிகவும்வருத்தியது. அப்போது ஆசாரியனாகிய வியாழபகவான் இந்திரனிடத்தில்வந்து நாசரகிதமான ஸ்ரீதெக்ஷணகயிலையில் எழுந்தருளிய சிவலிங்கப்பெருமானை வந்தித்துப் பூஜை புரிவாயாகில் அப்பழியானது உன்னைவிட்டுநீங்கும் என்று தெளிவு சொல்லிப்போயினன். பின்பு இந்திரனானவன் குருசொன்ன மொழியை உறுதியாகக்கொண்டு தேவர்களுடன் திரிசிராமலையை அடைந்து சிவதடத்தில்படிந்து திருக்கோவிலிற்சென்று ஐம்முகனாகியபரசிவத்தைச்சேவித்துநின்று நாத்தழும்பேற ஸ்தோத்திரங்கள்செய்ய வள்ளலாகிய சிவக்கொழுந்தர் ரிஷப வாகனத்தில் தோன்றி "நீ செம்பன் என்பவனைக்கொன்ற பழியையும், உன்னுடையதீவினைகளையும் போக்கினோம். நீ விரும்பியது யாது" என்று வினவத் தேவேந்திரன் சுவாமீ அன்போடு இம்மலையைத்தொழுகின்றயாவருக்கும் அந்தக்ஷணமே துன்பமும், பாவமும் நீங்கவேண்டும். புரட்டாசிமாதம் பௌர்ணமிகூடிய சுபதினத்தில் சிவதீர்த்தத்தில் மூழ்கி வெண்மைநிறமான தும்பை மலரைத் தேவரீருடைய திருமேனியில் சூட்டுகின்றவர்கள் அப்பொழுதே சிவகதியை அடையவேண்டும் என்னும் வரங்களைக்கேட்கச் சிவபெருமான் கருணைகூர்ந்து அவ்வாறு ஆகுகஎன்று அருளிச்செய்தனர். பின்பு இந்திராணி மணாளனாகிய தேவேந்திரன் மேகங்கள் படரப்பட்ட பெருமைபொருந்தியஸ்ரீதெக்ஷணகயிலைமலையினின்று நீங்கி ஐராவதம் என்னும் யானைமீதேறித் தனது கற்பகநாடாகியஸ்வர்க்கலோகத்துக்குப்போயினன்.

உ

சிவமயம்.

---

# ரு. வது-தீர்த்தச்சருக்கம்.

கேளுங்கள் முனிவர்களே! முன்னாளிலே உமாதேவியார் திரிநேத்திரங்களை உடைய சிவபரஞ்சுடரை வணங்கிச் சுவாமீ தேரீர் எழுந்தருளியமலைகளில் எம்மலைசிறந்தது என்று இனியசொற்களால் கேட்கச்சிவபிரான் திருவுளங்கொண்டு உமையே; திருக்காளத்திமலைக்கும், திருக்கோணமாமலைக்கும் மத்தியில்நடுநாயகமாய் விளங்காநின்றதும், புண்ணியநதியாகிய காவிரியாற் சூழப்பெற்றதுமான ஸ்ரீதெக்ஷிண கயிலையாகிய திரிசிராமலையே சிறப்புள்ளது என்று திருவாய் மலர்ந்தருளினர். அதைக்கேட்ட உமையாள் அதிகவிருப்பத்தினால் திருசிரகிரியை அடைந்து, திருமலைக்கொழுந்தரை வணங்கி யானைத்தோலையும், திருநீற்றையும், சந்திரனையும், சர்ப்பத்தையும் அணிந்தருளிய புங்கவனே! மச்சமும், கூர்மமும், வராகமுமாகிய மாலுக்கும் காண்பதற்கு அரிய பொருளே, வித்தை தத்துவமாகியும், நாத தத்துவமாகியும், விந்து தத்துவமாகியும் இராநின்ற சச்சிதாநந்த மூர்த்தியே அடியேன் ஸ்நானஞ்செய்து தேவரீரை அர்ச்சிக்கும்பொருட்டுச் சிவதீர்த்தம் தந்தருளவேண்டும் என்று பிரார்த்தித்தனர். சிவபெருமான் திருவுளங்கொண்டு தமது திருச்சடையிலுள்ள சிவகங்கையை ஆகாயமார்க்கமாய்ச் சிறிதுவிடுக்க, அந்த கங்காநதியானது நதிகளையுடைய கடல்களையெல்லாம் விழுங்கிப்பிரளயம்போல மேலிட்டுவந்தது. அப்பிரளயத்தில் சந்திரனானவன் சங்கைப்போலவும்; சூரியனானவன் செந்தாமரையைப்போலவும், பூமியிலுள்ள மலைகளெல்லாம் ஆமைகளைப்போலவும், மேகங்களெல்லாம் கொடிப் பாசிகளைப்போலவும் மிதந்தன. உலகத்திலுள்ள உயிர்களெல்லாம் நடுங்கும்படியாகவும், அஷ்டகஜங்கள் விழும்படியாக

வும் ஆகாய கங்கையானது பூமியின்கண் வந்து பிரவேசித்தது. அதுவருகின்ற செயலைக்கண்டு நெற்றிக்கண்ணை உடைய சிவபிரான் கோபக்குறியுடன் நோக்க அக்கங்காநதியானது மிகவும்அஞ்சி ஒடுங்கித்திரிசிராமலைக்கு வடபாரிசத்தில் சிவகங்கை என்னும் ஒப்பற்ற ஓர் புண்ணியதீர்த்தமாகிநிலைபெற்றுநின்றது. அதனருகே சிவசங்கரப்பிரபு சுயம்புவாகத் தோன்றினர். மானின்கண்களைப்போன்ற நேத்திரங்களை உடைய உமாதேவியார் அச்சிவகங்கையில்படிந்து திரிசிராமலையை அடைந்து தவத்தைச்செய்து வருகின்றநாளில் அமலனாகிய சிவபெருமான் நரைத்த தலைமயிரையும், தள்ளாடிய நடையையும், தளர்ந்திராநின்ற கையிற்கோலையும், அழகிய திருமேனியையும், வெயர்வைத்துளிகளையும் உடைய ஓர் விருத்த பிராமணரைப்போல எழுந்தருளிவந்து அம்மையினது பக்தியின் திடத்தைச் சோதித்தபின்னர், சிவபெருமான் விடையின்பேரில் தோன்றி உமையே! நீ வேண்டுவதுயாது என்று திருவாய்மலர்ந்தருள மலையரையன் புத்திரியாகிய பார்வதிதேவியார் அவரை வணங்கிப் பலவாறாகத் தோத்திரங்கள்பண்ணிக் கிருபாமூர்த்தியாகிய தேவரீர் இந்தஸ்தலத்திலுள்ள யாவும் என்பெயரினாலே வழங்கவும், ஆதியாயுள்ள சித்திரைமாசப்பிறப்பிலும், கடைசியிலும், பூர நக்ஷத்திரம் நவமிதிதிகூடிய சுபதினத்திலும் கிரிப்பிரதக்ஷணம் செய்கிறபேர்களுக்கு நல்லவரங்களை அருளிச்செய்யவும் வேண்டுமென்று பிரார்த்தித்தனர். அப்போது தேவர்கள் பூமழை பொழிந்து போற்றினார்கள். அக்காலையில் உமையாளது கூந்தலிலுள்ள இயற்கை மணமானது தேவர்கள் சொரிந்த மலரினும் மிக்கவாசனையை வீசியகாரணத்தால் உலகநாயகியைப்பார்த்து உலகநாதனாகிய சிராமலைநாதர் இளமைபொருந்திய மட்டுவார்குழலி என்று தமது அருமைத் திருவாக்கால் அழைத்துத் தமது இடப்பாகத்தில் வைத்தருளினர்.

அந்தச்சிவகங்கைத்தீர்த்தத்தில் ஒரு துளி உட்கொண்டால் உடலிலுள்ளநோய்கள் நீங்கும். இரண்டுதுளிகள் பருகினால்வறுமை போகும். மூன்றுதுளிகள் உண்டால் நினைத்தகாரியங்கள் எல்லாம் கைகூடும். சிவநதியென்றுஒருதரஞ்சொன்னால் தேவராவார்கள். சிவநதி சிவநதி என்றுஇரண்டுதடவை உச்சரித்தால்பிறவிநீங்கும்.

பலமுறை கூறினல் பரகதிஉண்டாகும். அப்பொய்கையைப்பிரத க்ஷணம் செய்வோர்களை இந்திராதி தேவதைகள் பிரதக்ஷணம் செய்வார்கள். அதில் ஸ்நானம்பண்ணி அந்தத்தீர்த்தத்தைப் பா னம்பண்ணினவர்கள் விஷத்தை உண்டருளிய விமலனுவார்கள். அதில்முழுகினபேருக்குப் பசாசுக்களால் வருகின்றதுன்பங்களும், பெரியபகையும், தீவினைகளும், ஆணவாதிகளும் அற்றுப்புத்திர பாக்கியமும், வீரமும், கீர்த்தியும், சித்தியும், முத்தியும் அடைதல் திண்ணமாகும். துளிஜலத்தை உள்ளேகொண்டவர்களைக்கண்ட வுடனே கொடியகாலனும் அஞ்சுவன். சப்தமாதர், சித்தர், சா ரணர், இராக்கதர், இயக்கர், கந்தருவர் முதலானவர்கள் அந்தத் தீர்த்தத்தில் மூழ்கி முத்தரானுர்கள். சர்ப்பமும், வண்டும் அதில் படிந்து சுவாமியைவணங்கி மாதவத்தைச்செய்து சிவார்ச்சனை பண்ணிப் பிரிவில்லாத சிவகணங்களாயின. கழுகுகளுக்கெல்லாம் ராஜனுகிய ஜடாயுவானவன் அதில் ஸ்நானஞ்செய்து அரியதவத் தைப்பண்ணி வேண்டியவரங்களைப் பெற்றுன். சப்தரிஷிகள் அ தில்படிந்து அருந்தவங்களைச்செய்ய மகாதேவர் அவர்கள்முன் பி ரசன்னராகி அவர்களுடைய விருப்பத்தின்படித்தமது திருமேனி யில் ஐக்யஞ்செய்தருளினர். மேற்குத்திசையிலுள்ள பிர்மதீர்த் தத்தில் ஸ்நானஞ்செய்வோர்களுக்கு மனதினுல் உண்டாகின்ற தீ வினைகள் நீங்கும். வடதிசையிலுள்ள மேற்கூறிய சிவகங்கையில் மூழ்கினவர்களுக்கு மனம் வாக்குக்களால் உண்டான தீவினைகள் நீங்கும். கீழ்த்திசையிலுள்ள நன்றுடையான் தீர்த்தத்தில் ஸ்நா னஞ்செய்வோர்களுக்கு மனம், வாக்கு, காயங்களினுல் உண்டா கின்றதீவினைகளும், ஜனனமரணமும், கொடியபாவங்களும் வில கும். தெற்குத்திசையிலுள்ள தீயதிலான் தீர்த்தத்தில் மூழ்கின் றவர்களுக்கு எல்லாத்தீவினைகளும்போய்த்தருமமும், நெடியசெல் வமும் உண்டாகும்.

உ

சிவமயம்.

# ௩. வது-திருநகரச்சருக்கம்.

கேளுங்கள் முனிவர்களே! முன்னாளிலே இராக்கதர்களுக்கு அரசனாகிய இராவணன் என்பவன் பகைவர்பேரில் வெறுப்பாய் ஜம்புத்தீவிற்குத் தெற்குத்திசையிலே வசித்திருந்து அதிகாரம் செய்யும்படி தன்தம்பிகளாகிய திரிசிரன், தூஷணன், கரன், என்பவர்களுக்கு மிகுந்தசிறப்பைக்கொடுத்து ஸ்ரீ தெக்ஷணகயிலை, திருஎறும்பியூர், திருக்கற்குடி என்னும் மூத்தலங்களிலும் இருந்து பலம்பொருந்தியசத்துருக்களைத்தடுக்கும்படிகாவலாகவைத்தான். அவர்களில் மூன்று சிரசுகளையுடைய திரிசிரன் என்பவன் ஸ்ரீதெக்ஷணகயிலையில் வசித்திருந்தான். அதனால் அம்மலைக்குத் திரிசிரபுரம், திருசிரகிரி, திரிசிராமலை, திருசிராப்பள்ளி என்னும் பலநாமங்கள் உண்டாயின. திரிசிரன் என்பவன் திரிசிராமலைநாதரைத் தினந்தோறும் தொழுதுவணங்கிப் பெருமைபொருந்திய அம்மலையின்பேரில் எழுந்தருளிய திருமலைக்கொழுந்தருக்கு, மயனாகிய அரக்கர் தச்சனாலே பொன்மயமான மண்டபங்களையும், நவமணிகளால் இழைத்தபெரியமதில்களையும், மேகங்கள்தங்கிய சிகரங்களையுடைய திருக்கோபுரங்களையும்பொருந்தியஒப்பற்ற ஓர் சிவாலயத்தைத் தேவர்களும் மகிழும்படி மிகவும் உன்னதமாகக் கட்டுவித்தான். அதின் அடிவாரத்தில் மந்தரகிரிக்கு ஒப்பான அரமியங்களையும், கந்தமாதனபருவதத்தைப்போல் வெளிமதில்களையும், உடைய வளப்பம்பொருந்திய பெரிய நகரத்தையும் உண்டுபண்ணினான்.

குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் ஆகியநான்கு நிலங்களும் ஒன்றுக்கொன்று சமீபமாகஇருத்தலால் மலைசார்நிலமாகிய குறிஞ்சிநிலத்து வேடப் பெண்களினுடைய கூந்தலிலுள்ள வண்டுகள்

முல்லையிலிருந்து இடைச்சியரது கூந்தலிலுள்ள முல்லைப்பூக்களின் தேனைஉண்ணும். மருதநிலத்து கடைசியர் எறிகிறகரும்பினது முத்துக்களால்நெய்தல் நிலமாகிய கடற்கரையிலுள்ள பறவைகள் நீங்கும். இவ்வுலகத்தைச்சூழ்ந்த சமுத்திரமே தடாகமாகவும், அவ்வுலகம் தாமரைப்பூவாகவும், அவ்வுலகத்திலுள்ள க்ஷேத்திரங்கள் அத்தாமரையின் இதழ்களாகவும், செந்நெல்விளைகின்ற மழநாடானது அந்தத்தாமரையினது வாசனை பொருந்திய பொகுட்டாகவும், அப்பொகுட்டில் வசிக்காநின்ற மகாலட்சுமியைப்போலவும் திரிசிராமலையானது விளங்காநிற்கும். வயல்களின் பக்கங்களிலுள்ள தடாகத்தினது தாமரைப்பூக்களில் அவ்வயலிலுள்ள மச்சங்களானவைபாயும். அதைப்போலக் கடைசியருடைய முகங்களாகிய தாமரைப்பூக்களில் அவர்களுடைய கண்களாகியமீன்களானவைபாயும். பசுக்களும், எருமைகளும், தாமரைப்புஷ்பங்களையும், கருங்குவளைமலர்களையும் மேய்வதினால் அம்மலர்களிலிருந்து சிந்துகின்ற பரிமளம்பொருந்திய தேனும், விடாமல் பொழிகின்ற சோனைமழையைப்போல்அம்மாடுகள் சொரிகின்றபாலும் குளிர்ச்சிபொருந்திய வயல்களிலெல்லாம் நிறைந்திருக்கும்.

திரிசிரன் என்பவன் முத்துக்கள்நிறைந்திராநின்றஅப்புண்ணியதீர்த்தங்கள் நான்கிலும்ஸ்நானஞ்செய்துசிரகிரிநாதரை அர்ச்சித்து அரியதவங்களைச் செயதுவந்தான். அவனுடையபத்தியைச் சோதிக்கும்பொருட்டுச் சிவபெருமான் அவன்முன் பிரசன்னமாகாமல் இருந்தனர். திரிசிரன் என்பவன் சுவாமியானவர் இன்னமும் வராதிருப்பது யாதுகாரணம் என்றுசொல்லித் தனது இரண்டு சிரசுகளையும் அரிந்து அக்கினியில் ஆகுதிசெய்தான் அப்போதும் சுவாமி பிரசன்னமாகவில்லை. உடனே திரிசிரன் என்பவன் தனது மூன்றாவது தலையையும்அரிய எத்தனிக்கையில் சிராப்பள்ளிச்செல்வர் அவன்முன்னே ரிஷபவாகனரூடராய் எழுந்தருளினர். அப்போது திரிசிரன் பொன்மலர்களையும், தேன்மலர்களையும், மணமலர்களையும், தனது கரமலர்களால்சொரிந்து, கரிய யானைமுகனையும், அழகியஆறுமுகனையும்பெற்ற ஐம்முகனாகிய ஸ்ரீசதாசிவமூர்த்தியை நான்முகன்முதலானவர்களுக்கு முன்பாகத்தனது மும்முகங்களாலும் தரிசித்துநின்று சுவாமீ! தேவரீ

ருக்கும், இந்தநகரத்துக்கும் என்பேராகவே விளங்கும்படி வரத்தைத் தந்தருளவேண்டும் என்று பிரார்த்திக்கக் கிர்பாமூர்த்தியாகிய சிவபிரான் அவ்வாறு அனுக்கிரஞ்செய்து அந்தரத்தானமானார். பின்பு திரிசிரன் இலங்கைக்குச்சென்று இங்குநடந்த விர்த்தாந்தங்களையெல்லாம் இராவணனுக்குச் சொல்லிச் சிலகாலத்துக்குப்பின் தானும் மோக்ஷகதியை அடைந்தான்.

---

உ

சிவமயம்.

# எ. வது-நிவனத்ததுகொடுத்த சருக்கம்.

தசரதமகாராஜாவின் புத்திரரான ஸ்ரீ ராமமூர்த்தியானவர் தாடகைஎன்னும் அரக்கியைப்போரில்வதைசெய்து, சீதாபிராட்டியை விவாகஞ்செய்த பின்னர், பரதனுக்குஅரசாக்ஷியைக்கொடுத்துச்சரயூநதியைக்கடந்து, சீதையையும், இலட்சுமணனையும்அழைத்துக்கொண்டு கானகத்திற்சென்றுசூர்ப்பநகையைமூக்கினையரிந்து, மானுகவந்தமாரீசனைமாய்த்து, வாலியைவதஞ்செய்து, கவந்தனைக்கொன்று, கடலைமலைகளாலே தடுத்து, அதின்வழியாகத்தம்பிமுதலிய வானரசேனைகளுடன் இலங்கையிற்சென்று, இராவணன் முதலானவர்களைச் சங்காரம்செய்து, அவனுடைய அரசாக்ஷியை அபயம் என்று சரணடைந்த விபூஷணனுக்குக் கொடுத்துப் புஷ்பவிமானத்தின் மேலேறி ஆகாயமார்க்கமாய் அயோத்தியாபுரிக்குச் செல்லும்போது ஸ்ரீதெக்ஷணகயிலையைக்கண்டு புட்பவிமானத்தினின்றும் இறங்கிச் சிவதீர்த்தத்தில் மூழ்கிப்பலவித

புஷ்பங்களால் சுவாமியை அர்ச்சனைசெய்து ஆனந்தபாஷ்பம்பொழியச்சிவம் என்னும்மூலமந்திரத்தை உச்சரித்து நின்று மின்போலும் பிரகாசம்பொருந்திய ஜடையை உடைய இறையவனே! வந்தனம், முன்னேதிரிபுரதகனஞ் செய்யும்போது நான்கு வேதங்களையும் குதிரைகளாகக்கொண்டவனே! வந்தனம், அக்கினி எரியும்படி நின்று நடனஞ்செய்கின்ற முதல்வனே! வந்தனம், பாவத்தொழிலை மிகுதியாகக்கொண்டதிரிபுரமானதுகெடும்படிநகைத்தருளிய பரமசிவனே! வந்தனம், விஷ்ணுவைப் பாணமாகக்கொண்டவனே! வெள்ளிமலையையுடையவனே! வந்தனம்வந்தனம்என்று ஸ்தோத்திரங்கள்பண்ணச் சிவபெருமான்ரிஷபவாகனரூடராய்எழுந்தருளி வந்து அவருக்குவேண்டியவரங்களைக்கொடுத்து அந்தரத்தானமானார். பின்பு ஸ்ரீராமர் கோசலதேசத்தையடைந்து இந்திரன் மகிழும்படி யாகத்தைச்செய்து இன்புற்றிருந்தனர்.

காசிக்ஷேத்திரமானது தன்னிடத்தில்வந்து இறந்தவர்களுக்கு முத்தியைக்கொடுக்கும், திருவாரூர்ஸ்தலமானது தன்னிடத்தில் பிறந்தவர்களுக்கு மோக்ஷத்தைக் கொடுக்கும். அந்தஇரண்டுஸ்தலங்களிலும் அடைகின்றயாவையும் தருகின்ற ஸ்தலமானது அந்தத்திரிசிபுரமேயல்லாமல் பூமியில் வேறில்லை. நாவலந்தீவிலுள்ள அந்தத்திருச்சிராப்பள்ளி என்னுந்திவ்ய தலத்தையடைந்து தேவர்களும், முனிவர்களும், மனிதர்களும், சித்தர்களும், விலங்குகளும், பறவைகளும், நாகலோகத்துமாதர்களும், மற்றுமுள்ளயாவர்களும் முத்தியை அடைந்தார்கள். பாண்டவர் ஐவருக்கும் துரோபதையானவள் தேவியாக அமைந்தகாலத்தில் நாரதமுனிவர்வந்து ஒவ்வொருவர் ஒவ்வொருவருஷம் இந்தப்பெண்ணைப்புணரவேண்டும். அப்புணர்ச்சியை நேரே கண்டோர்பெரியபூமியை வலஞ்செய்யத்தக்கவர் ஆவார்கள் என்றுசொல்லிப் போயினர். பின்புதருமரும், துரோபதையும், அந்தப்புறத்தில் சையோகமாயிருக்கும்போது ஒருகாரணத்தால் அர்ச்சுனனானவன் அங்குசெல்லும்படி நேரிட்டது. அப்பாவமானது நீங்கும்பொருட்டு நாரதமுனிவர்சொல்லியவண்ணம் அவன் பூமியிலுள்ள ஸ்தலங்களை எல்லாம்தரிசித்துத் திரிசிராமலையை வந்தடைந்து நன்முகச்சுவாமியை அர்ச்சனைசெய்தான். ஸ்ரீதிரிசிரகிரிநாதர் அவன்முன்பிரசன்னமாகி அவனுக்குவேண்டியவரங்களைத் தந்தருளினர்.

பிறகு அர்ச்சுனன் என்பவன் அநேக மாதர்களை மணஞ்செய்து ப ரகதிஅடைந்தான். அந்த க்ஷேத்திரத்தை அடைந்தவர்களுக்குத் தெரிந்தும், தெரியாமலுஞ் செய்த பாவங்கள்தீரும். மனிதப்பிறப் பின்பயன்களை அடையலாம். அதில்பிறந்தாலும், இறந்தாலும் முத்தியுண்டாகும். அனுமன் என்பவன் அத்தலத்திலுள்ள சிவ தீர்த்தங்களில் படிந்து மூன்றுகாலங்களிலும் சிவபெருமானுக்குத் திருமஞ்சனங்களால் அபிஷேகாதி அர்ச்சனைசெய்து வணங்கப் பாற்கடலில்தோன்றிய விஷத்தை உண்டருளிய நீலகண்டராகிய கடவுள் ரிஷபாரூடராய் எழுந்தருளிவந்து அவனுடைய வேண்டு கோளின்படி அனுமமுத்திரையானது அந்தஸ்தலத்தில் விளங்கும் படியாகக் கிருபைசெய்தும், அரிதாயுள்ள செல்வத்தை அளித்தும் அந்தரத்தானமானார் என்று கௌதமமுனிவர் கூறினார்.

உ

சிவமயம்.

# அ. வது-சாரமாமுனிச் சருக்கம்.

அவ்வாறு அருளிய கௌதமமுனிவரை மற்றமுனிவர்கள் வ ணங்கி அரியதவத்தையுடைய சாரமாமுனிவர் திரிசிராமலையில் தவஞ்செய்த வரலாறுகளைத் தேவரீர் அருளவேண்டுமென்று வி னவக்கௌதம முனிவர் சொல்வார்.

கேளுங்கள் முனிவர்களே திரேதாயுகத்திலே நான்குவேதங் களையும், ஆறுசாஸ்திரங்களையும் தெளிவுற ஓதியுணர்ந்த பிரமசன் மர்என்னும்பெயரையுடையப ரமயோகிஒருவருண்டு. அவர்ஆகா

யத்தையளாவியிராநின்ற இமயமலையில் அரியதவத்தைச் செய்தனர். சிவபெருமான் மலைபோன்ற ரிஷபத்தின்பேரில் எழுந்தருளி வந்து அன்பனே! நீ விரும்பியது யாதென்று வினவ அவர்பொன் போலும் அருமையான புஷ்பங்களால் சுவாமியினுடைய பொற்பாதகமலங்களில் அர்ச்சித்துத் தொழுதுநின்று முத்தி வேண்டுமென்றனர். சிவபெருமான் "உனக்கு இத்தலத்தில்முத்தியில்லை, நீ இவ்வரையைநீங்கி உத்தமமாகிய காசித்தலத்தில் வசிக்காநின்ற சோமசன்மயோகியினதுமனைவியின்வயிற்றிலே பிள்ளையாகப்பிறந்து அவர்களது கண்கள்களிக்கும்படி பத்திசெய்து இல்லறத்தை வழுவாது நடத்தி ஒருபாலனைப்பெற்றபின்பு, இல்வாழ்க்கையை விட்டுத்துறவறம்பூண்டு, காவிரிநதி தீரத்தில் உயர்ந்து விளங்காநின்ற திரிசிராமலை க்ஷேத்திரத்தை அடைந்து அங்குவீற்றிருக்கும் நம்மைப்பாதலத்திலுள்ளமுட்செவ்வந்திப்புஷ்பங்களால் அநுதினமும் அர்ச்சித்து வழிபடுவாயாகில் அவ்விடத்தில் யாம் உனக்கு முத்தியளிப்போம்" என்று அருளிச்செய்து அந்தரத்தானமானர்.

அவ்வாறு பிரமசன்மயோகியார் யோகமுறையால் சரீரத்தை விட்டுக்காசித்தலத்தில் சோமசன்மரும், அவருடைய இல்லாளும் மகிழும்படி பாற்சமுத்திரத்தில் உதித்த குளிர்ந்தசந்திர ஒளியைப் போலப்புத்திரராக ஜனித்தார். பின்பு பிதாவாகிய சோமசன்மர் அளவில்லாத சந்தோஷமடைந்து அப்புதல்வருக்குச்செய்யவேண்டிய சடங்குகளை எல்லாம் செய்துமுடித்து அவருக்குத் திருநாமமிடவேண்டுமென்று கருதின அளவில் "சோமசன்மனே! தவத்தில்தோன்றிய உன்மைந்தனுக்குச் சாரன் என்றுயாவரும் சொல்லும்படி பெயரிட்டு அழைக்கக்கடவாய்" என்று ஆகாயத்தினிடத்து ஓர்அசரீரிவாக்குபிறந்தது. சோமசன்மரும், அவர்பத்தினியாரும் அதைச்செவியுற்று வணங்கி ஸ்தோத்திரங்கள்பண்ணி மனமகிழ்ச்சியினால் அக்குமாரருக்குக் கடவுள் அருளியபடி சாரன் என்னும் திருநாமம் சூட்டினார்கள். முற்பிறப்பின் இயல்பை அறிந்த அந்தச்சாரமாமுனிவர் கல்விகேள்விகளில்சிறந்து, மோக்ஷநூல்களை அறிந்து, இல்வாழ்க்கைக்குரிய தனது மனைவியுடனே இல்லறதருமங்களை வழுவாது நடத்திப்புண்டரீகம், வாசபேயம்முதலிய யாகங்களைச்செய்து, தேவர், முனிவர், தென்புலத்தார்முதலான

கடன்களை முடித்துக்கொண்டு வந்தார். பின்பு திருவருளால் அவர் ஓர் சற்புத்திரனைப்பெற்று, அப்புதல்வனைத்தமது குலத்துக்குரிய நீதியில் பயிலும்படி செய்வித்துத் துறவறம்பூண்டனர். பிறகு அவர் தென்திசையில் விளங்காநின்ற ஸ்ரீதெக்ஷண கயிலாயமாகிய திரிசிராமலையை அடைந்து, சிவதீர்த்தத்தில்படிந்து, விபூதி உருத்திராக்ஷங்களை அணிந்து திருக்கோவிலில்சென்று ஸ்ரீதிரிசிரகிரிநாதரையும், ஸ்ரீ மட்டுவார்குழலம்மையாரையும், மிக அருமையாய்க்கிடைத்த இந்தஉடம்பினைப்பெற்ற பயனாகிய ஜனனமரணதுன்பங்கள் நீங்கிப்பெறற்கரிய பேரின்பமுத்தியை அடையும் பொருட்டு, அன்று அலர்ந்தபுஷ்பங்களால் அனுதினமும் அர்ச்சித்துக் கண்கள்குளிரத் தரிசித்துந் தாரைதாரையாய் ஆனந்தபாஷ்பம் பொழியநின்று, பிரமனும், நாரணனும், அகஸ்தியர் முதலான பெரியோரும், பரமயோகியரும், தேவர்களும் பணிந்து வணங்குகின்றபரனே! கரனும், அவனுக்கு இளையவர்களும் தரிசிக்கும்படி சூரியப்பிரகாசம்போல எழுந்தருளிவந்து அவர்களுக்கு மேலான வரங்களைக் கொடுத்தருளிய இறையவனே! அனுமனும் அர்ச்சுனனும்வணங்கியஅரனே! இனியசொற்களையுடையசத்தமாதர்கள்இறைஞ்சிய இறையவனே! கருமையானநீண்டகூந்தலையுடையஉமையவள் வணங்கியமணியே! தனிமையானவர்களுக்குத்தாயே! என்றுபலவாறு ஸ்துதிசெய்துவணங்கி விடைபெற்றுக் கிரிவலஞ்செய்து புதிதாக அமைக்கப்பட்டபன்னகசாலையில் தவத்தைச் செய்துகொண்டிருந்தனர்.

---

உ

சிவமயம்.

---

# ௯. வது-சூராவாதித்தச்சருக்கம்.

கேளுங்கள் முனிவர்களே! நீடூழிகாலம் வாழத்தக்க அரிய தவத்தையுடைய அந்தச்சாரமாமுனிவரது பெருமைபொருந்திய கதையை நிறுத்திச்சூராவாதித்தச் சோழமகாராஜாவானவன் திரிசிராமலையைவந்தடைந்து கோழிமாநகரம்என்கின்ற உறையூரை இராஜதானியாகச்செய்து செங்கோல்செலுத்தி ஆண்டுவந்த விசேஷத்தைச்சொல்வோம். மனுகுலத்தில் தோன்றிய அழியாப்புகழ்படைத்த ஜனநாதச் சோழமகாராஜா என்கின்ற ஒருவன் இருந்தான். அவன் தனது புத்திரனாகிய இராஜசூளாமணி என்கின்ற சூரவாதித்தச் சோழமகாராஜாவினிடத்தில் அரசாக்ஷியை ஒப்புவித்து மோக்ஷத்துக்கு ஏதுவாகிய சிவயோகசாதனையில் இருந்தான். சூரவாதித்தன் அறுபத்துநாலுகலைகளையும் ஒருங்கு உணர்ந்தவன். வில்வித்தை, வாள் வித்தைமுதலிய ஆயுதவித்தைகளில் சிறந்தவன். யானையேற்றம், குதிரையேற்றம், இரதாரோகணம் முதலியவைகளில் தேர்ந்தவன். ஆதிசேஷனும் இளைப்பாறும் படிபூமிமுழுவதையும்செங்கோல்செலுத்திஆள்கின்றவன். அவன்பூமியைவலம்செய்யும்பொருட்டுஐம்பத்தாறுதேசத்துஇராஜாக்களும் தன்னை வணங்கும்படியாக இரத, கஜ, துரக, பதாதிகளுடன் மகாபரிசுத்தம்பொருந்திய கங்கை, காவிரிமுதலிய புண்ணிய நதிகளிலும், சிவதீர்த்தங்களிலும் ஸ்நானஞ்செய்து, அந்நதிகளின் கரைகளிலுள்ள சிவாலயங்களையும் தரிசித்துக்கொண்டு திரிசிராமலை க்ஷேத்திரத்தை அடைந்து, அதைச் சூழ்ந்து இராநின்ற பரிசுத்தம்பொருந்திய சிவகங்காமுதலிய தீர்த்தங்களில்படிந்து திருமலைக்கொழுந்தரையும், ஸ்ரீ சுகந்தகுந்தளாம்பாளையும், தரிசித்துவணங்கி மேற்றிசை நோக்கிச்சென்றான். அப்போது மகா

பராக்கிரமமுள்ள ஒருகோழியானது மின்னலைப்போல் ஆகாயத்தில்தோன்றிக் கடல்முழக்கம்போல்கூவி ஆக்கிரமித்துச் சிறிச்சிறகைவீசியடித்து, யாவரும் ஆச்சரியப்படும்படி, சோழமகாராஜாவினது சேனாசமுத்திரத்தைச்செல்லவொட்டாது எதிர்த்துத்தனது, இரண்டுகால்களிலுள்ள முட்களால் பட்டத்து யானையினுடைய அவயவங்களில் கீறி, இரத்தப்பிரவாகத்தில் மூழ்கி முருகக்கடவுளைப்போல் கோழிக்கொடியோன் என்றுசொல்லும்படி சோழமகாராஜனது வெற்றிக்குடையின்மேல் ஏறிநின்றது. உடனே சேனாவீரர்கள் அக்கோழியினுடைய வீரச்செய்கைகளைக் கண்டு அதிசயித்துக்கோபங்கொண்டு, அதோடு போர்செய்ய எத்தனிக்கையில் சோழமகாராஜன் அவர்களைத் தடைபண்ணினான். அப்போது அக்கோழியானது மேகமண்டலத்திலே ஐம்புலன்களையும் அடக்காநின்ற யோகிகளது மனம்போல மறைந்துபோயிற்று. பின்பு சோழமகாராஜன் இந்தப்பூமியினுடைய விசேஷத்தால் ஒருகோழியானது நம்மை எதிர்த்துச்சண்டைசெய்தபடியால் இவ்விடமே நமக்கு உறைவிடம் ஆகுமென்று நிச்சயித்து, அதில்மாட மாளிகை, கூடகோபுரம், கோட்டை, கொத்தளம், அரமியம் முதலிய அரசர் வீதிகளை உடைய ஒருபெரிய நகரத்தை உண்டுபண்ணிச் சூரியமண்டலத்தை அளாவிய ஆஸ்தானமண்டபத்தில் வீற்றிருந்து செங்கோல்செலுத்தி ஆண்டுவந்தான், இதுநிற்க.

மகாதவசிரேஷ்டராகிய சாரமாமுனிவர் என்பவர் காலை, மத்தியானம், மாலை என்னும் மூன்றுகாலங்களிலும் வாசனைபொருந்திய தேனைச்சொரிகின்ற செந்தாமரை, நீலோத்பலம், செங்கழுநீர், சண்பகம், குருந்து, மல்லிகை, முல்லை, இருவாக்ஷி என்கின்ற புஷ்பங்களால் சிராமலைநாதரை அர்ச்சித்துவந்தார். அவர் ஒருநாள் எக்காலத்தில் அடியேனுக்குச் சிவபெருமான் திருவருள் செய்வரோ என்று துன்புற்றிருக்கும்போது, சிராமலைநாதரின் ஏவலாலே அழைக்கவந்ததுபோல் புதுமையாயுள்ளஒருபுஷ்பத்தினது பெருமைபொருந்தியவாசனையைத் தென்றல்காற்றானது கொண்டுவந்து வீசியது. சாரமாமுனிவர் சிவபெருமான்முன்பு திருவாய்மலர்ந்து அருளிச்செய்த முட்செவ்வந்திப் பூவினது வாசனை இதுவென்று மனதில் துணிந்து தாணுவாகியசிவபெருமானுக்கு இந்தப்

பூக்களைக்கொண்டுவந்து அர்ச்சித்தவர்களைப் பார்க்கவேண்டுமென்று ஆவலோடு இருந்தார். பின்புசாரமாமுனிவர் நித்திரைசெய்கின்றகாலத்தில் சிவபிரான் அவருடைய சொப்பனத்தில்எழுந்தருளி "அனபனே! நீமனதில் கொண்டகவலையை விட்டொழிவாய். நீ நாளையதினம் நம்முடைய சந்நிதியில்மறைந்திருந்து நம்மை அர்ச்சித்துவருகின்ற நாககன்னியர்களைச் சந்தித்துச் செவ்வந்திப்புஷ்பங்களின் வரவைக்கேட்பாயாகில், அவர்களால் உன்மனதில் நினைத்தகாரியம்முடியும்" என்று அருளிச்செய்து மறைந்தருளினர். சாரமாமுனிவர் நித்திரையைவிட்டு எழுந்து கடவுளைத்தொழுது அன்றைக்குச்செய்யவேண்டிய நித்தியகன்மானுஷ்டானங்களை முடித்துச் சிராப்பள்ளிச்செல்வரைத் தரிசித்துக்கொண்டு அன்று இராத்திரி சுவாமி சந்நிதியில் ஓர்புறத்தில்மறைந்திருந்தனர். ஆதிசேஷனது புத்திரிகளாகிய சப்தகன்னிகள் வழக்கம்போல் பாதாளலோகத்தைவிட்டுப் புறப்பட்டு மலையடிவாரத்திலுள்ள சிவகங்கையில் ஸ்நானஞ்செய்து பிறவித்துன்பங்கள் நீங்கும்பொருட்டுச் சிராமலைநாதரைப் பெருமைபொருந்திய செவ்வந்திமலர்களால் அர்ச்சித்துத் தொழுது பிரதக்ஷணஞ்செய்து திரும்புங்காலையில், சாரமாமுனிவர் அவர்களைச்சந்தித்துத் தமதுவரலாறுகளையும், சிவபெருமான் சொப்பனத்தில் அருளிச்செய்ததையும் அவர்களுக்குத் தெரிவித்துப் பின்னும் சொல்லுவார். சிவநேசமுள்ள பெண்களே! கேளுங்கள் சிவாலயத்திற்சென்று மர்தவர்களும், ரிஷிகளும், தேவர்களும், மனிதர்களும் சிவார்ச்சனை பண்ணுவது கிரமம். பஞ்சசுத்திகளுஞ்செய்து சிவாகமப்படி மாதர்கள் பூஜைசெய்வது முறைப்பிசகாகும். பெண்கள் கடவுளை அஞ்சலிசெய்து வணங்குவதே முறையாகும் என்று சாரமாமுனிவர்சொல்ல, நாககன்னியர்கள் பக்தியை உடையோர் யாவராயினும் சிவபெருமானைப் பூஜித்துப் பணியலாம். பௌத்தமதத்தில் திருஅவதாரஞ்செய்த சாக்கியநாயனுர் அர்ச்சனைக்குப் பதிலாக அன்பினுல் சுவாமியினுடை திருமேனியில் எறிந்தது கற்களோ அல்லது மலர்களோ? வேட்டுவச்சாதியில் பிறந்தகண்ணப்பநாயனுர் பக்திசெய்துமுத்தியை அடையவில்லையா? யானைமுதல் எறும்பு கடையான உயிர்கள் அனைத்தும் வானநாடணுகிய சிவபெருமானைப் பூஜிக்கவில்லையா? கிரியையில் நடப்போர்ஞானத்தை

அடைகின்றவர் அல்லவோ? சரிதை, கிரியை, யோகம், ஞானமென் பவற்றை உடைய எல்லோருக்கும் மூலமாயிருப்பது பக்தியே. பக்தியில்லாது முக்தியில்லை. "பத்திவலையிற் படுவோன் காண்க." என்றதிருவாக்கின்படி பரமசிவமானவர் பக்தியாகியவலையில் அகப்படுவாரேதவிர பக்தியில்லாது மற்ற எவ்விதமான பூஜை, ஸ்தோத்திரம், ஜெபம், தியானம், நிஷ்டை, வேதம் ஓதல், சாஸ்திரம் கேட்டல், அருந்தவங்கள், அன்னதானங்கள், ஆசாரங்கள், யாகங்கள், கங்காஸ்நானம் முதலிய எவ்வித சற்கருமங்களைச்செய்தபோதிலும் வெளிப்படமாட்டார். அவர்சகல தத்துவங்கடந்த அதீதர்; தாயைப்பார்க்கிலும் கருணைபுரிகின்றவர்; பக்தராயுள்ள அடியார்களுக்கு இன்பமாயுள்ளவர்; சிரேஷ்டமாயுள்ள சிவயோகிகளாகிய சித்தருக்கெளியவர்; திருமாலும், பிரமனும் தேடியும் காண்பதற்கு அரியவர். என்று சொல்ல, சாரமாமுனிவர் அவர்களுடைய பக்தி வயிராக்கியத்தைக்கண்டு மிகவும் சந்தோஷித்து, அவர்களுக்கு ஞானோபதேசஞ்செய்து அவர்களோடு சிவதீர்த்தத் தினதுபிலத்துவாரத்தின் வழியாக நாகலோகத்துக்குச் சென்று நாகராஜனைக்கண்டு அவனால் மிகஅன்போடு கொடுக்கப்பட்டவாசனை பொருந்திய முட்செவ்வந்திமலர்ப் புதல்களையும், நாகரத்னங்களையும் கொண்டுவந்து சிவசந்நிதானத்தில் வைத்தார். அச்சமயத்தில் நிர்மலசொரூபியாகியகடவுள் இந்தச்செவ்வந்திப்பயிர்களை இன்ன தானத்தில் பதித்தால் அவைகள் ஒன்று, நூறு, அனந்தமாய்க்கிளைத்து அறிவுடையநமது அடியார்கையில் கொடுத்ததானம்போல் விருத்தியாகுமென்று அருளிச்செய்ய; அவ்வாறு சாரமாமுனிவர் அப்புதல்களைச் சிராமலையின் மேற்குத்திக்கிலே வைத்துப்பயிர்பண்ணி விருத்திசெய்தார். பின்பு அந்தப்பூச்செடிகளில் அரும்புகள் உண்டாகிமலர்ந்து அவைகளில் தேனும் கொப்புளித்து வழிந்து பெருக்கெடுத்து ஓடின. சாரமாமுனிவர் மகிமைபொருந்திய அந்தச்செவ்வந்தி மலர்களால் திரிசிராமலை நாதரைத்தினந்தோறும் நியமத்தோடு அர்ச்சித்து வழிபட்டு வந்தார். அதனால் அவருடைய கவலைகளும், பாவங்களும் நீங்கின. இதுநிற்க-

சூரவாதித்தச் சோழமகாராஜன் உறையூர்ப்பட்டினத்திலிருந்து இராச்சியாதிகாரம் செய்துக்கொண்டு வருங்காலத்தில் ஒருநாள் மிருகவேட்டை ஆடும்பொருட்டுத் திரிசிராமலையைநோக்கிச் சென்று சாரமாமுனிவருடைய திருநந்தவனத்தின் பக்கங்களிலெல்லாம் இராமுழுதும் சஞ்சரித்துக்கொண்டு இருந்தான். அப்போது நாககன்னியர்எழுவரும் வழக்கம்போல் சிராமலைநாதரைத் தரிசிக்கும்பொருட்டுச் சிவதடத்தில்வந்து மூழ்கினதை, இராஜன் கண்டு அவர்கள்மேல் மோகங்கொண்டு அவர்களை விவாகம்செய்யக்கருதி அவர்களுடைய புடவைகளை எல்லாம் கவர்ந்துகொண்டான். அவர்கள் நீதியையுடைய அரசனே! நீர் இவ்விதமாய்ச் செய்வது யாதுகாரணம் என்றுகேட்க, வேந்தன் நான் உங்களை விவாகஞ் செய்யும்பொருட்டேதான்என்றனன். அவர்கள், எங்களைப்பெற்றோர்களது அனுமதியின்பேரில் நாங்கள் உம்மைக்கல்யாணம் செய்துக்கொள்வோம் என்றுசொல்ல, மன்னன் அதற்கு உடன்பட்டு அவர்களுடைய வஸ்திரங்களைக் கொடுத்தான். அவர்களும் நியமத்தோடு சிவதரிசனம்பண்ணிக்கொண்டு திரும்பும்போது இராஜன்நாககன்னியர்களோடு நாகலோகத்துக்குச்சென்றுஅவர்களில் மூத்தவளாகிய காந்திமதியை விவாகம் செய்துகொண்டு மாமனாராகிய ஆதிசேஷனால் கொடுக்கப்பட்ட சிறப்புகளை எல்லாம் பெற்றுக்கொண்டு தேவேந்திரனைப்போல்தன்மனைவியோடுசிலநாள் காம இன்பத்தை அனுபவித்துத் தனது பதியாகிய உறையூருக்குப்போக எண்ணினான். அதைஅறிந்த அவன்மனைவியாகியகாந்திமதி என்பவள் அரிதாகியசிவலிங்கம் ஒன்று எனது பிதாவினிடத்தில் இருக்கின்றது. அவர் அதைப்பூஜித்துப் பதினான்கு உலகங்களையும் முடியின்பேரில் தாங்கும்படியான சத்தியும், சமஸ்த வித்தியாவிலாசமும் பெற்றனர். ஆதலால் நீர் அவரிடத்தில் அந்தச்சிவலிங்கத்தைப் பெற்றுக்கொண்டு உம்முடையநகரத்துக்குச் சென்றால் பேரின்பமும், அஷ்டமாசித்தியும், அரியமுத்தியும்பெறலாம் என்றுசொன்னாள். அரசன் மிகவும் களிப்படைந்து மாமனாராகிய ஆதிசேஷனிடத்தில் தன்மனையாளுடன் சென்று நமஸ்காரம்பண்ணி உத்திரவுகேட்டான். நாகராஜன் ஆசிர்வதித்துச் சோழராஜனுக்குச் செந்நெல்லும், கருப்பூரவல்லிவெற்றிலையும், பருவதம்போன்ற திரவியங்களையும், நவமணிகளையும் கொடுத்து எனதுமருமகனாகிய சோழமகாராஜனே இன்னம் உமக்கு

வேண்டுவது யாது என்று வினவ அரசன் உம்மிடத்தில் இருக்கின்றசிவலிங்கம் எனக்குவேண்டும் என்றுபிரார்த்தித்தான். உடனே ஆதிசேஷன் ஒன்றும் சொல்லாமல் துக்கசாகரத்தில் மூழ்கினவனாய் அன்று இராத்திரி நித்திரைசெய்தான். விடையோனாகிய சிவபெருமான் அவன் சொப்பனத்தில் தோன்றி "அன்பனே உன்னைப்போல உனதுமருமகனும் அன்பிலே அதிகமானவன் ஆதலால் இன்பமேனியாகிய நமதுவடிவம் இரண்டுகூறாக இருக்கும். அதில் ஒருபாதியை நீயும், மற்றொருபாதியை அவனுமாகப் பூஜித்து வாருங்கள்" என்று சொல்லி மறைந்தருளினார். ஆதிசேஷன் தனது கனவில் வந்து சிவபெருமான் அருளிச்செய்ததை உணர்ந்து பூஜாகிரகத்தில்வந்துஅமலனாகிய கடவுள் இரண்டுகூறாக இருக்குந்தன்மையைக்கண்டுமனமகிழ்ச்சியடைந்து ஒருபாதியாகிய சிவலிங்கத்தையும், கூர்மைபொருந்திய வாளாயுதத்தையும், தனதுமருமகனுக்குக் கொடுத்துத் தன் மகளின்பேரில் எப்போதும் நீர் பிரியம்வைத்திருக்கவேண்டும் என்று வேண்டிய உபசாரங்களைச்சொல்லித் தன்புத்திரியையும் அவனோடு அனுப்பினான். அவர்கள் இருவரும் நாகராஜனிடத்தில் விடைபெற்றுக்கொண்டு பூலோகத்துக்கு வந்து சிவகங்கையில் ஸ்நானம்பண்ணி யானையை உரித்துப் போர்த்தருளிய சிவபெருமான் எழுந்தருளி யிருக்கும் திரிசிராமலையைத்தரிசித்து வணங்கிக்கோழிமாநகரமாகிய உறையூரில் வந்து சேர்ந்தனர். பின்புசோழமகாராஜன் தான்கொண்டுவந்த ஒருகூறாகிய சிவலிங்கப்பெருமானை ஸ்வர்ணமயமான ஆலயத்தில் அழகுபெற எழுந்தருளப்பண்ணி, அவருக்கு எந்நாளும் பூஜை, நைவேத்தியம், தேர், திருவிழாமுதலியவற்றை ஏற்படுத்தி ஆகமவிதிப்படி பூஜைக்கு வேண்டியபொருள்களையெல்லாம் அன்புடனே உதவிச்சிறப்புச்செய்து செங்கோல்செலுத்தி ஆண்டுவந்தான். சிவபக்தியுள்ள அக்காந்திமதியானவள் தன்கணவனுடைய அனுமதிபெற்றுப் பெருமையுடைய அண்ணலாகிய சிராமலைநாதரைப்பிரதிதினமும் தவறாது தன்கால்நோகும்படிநடந்து தரிசனம் செய்து வந்தாள். அப்படித்தரிசித்து வருகின்ற நாட்களிலே காந்திமதியினுடைய அழகிய ஆலிலைபோன்ற வயிற்றிலேகர்ப்பம் உண்டாகி மூன்றாம்பிறையைப்போல் வளர்ந்துகொண்டுவந்தது. கர்ப்பமானது முதிர்ந்தும் அவள்முன்போலத்தரிசனம்செய்துவந்தாள்.

ஒருநாள் தரிசனத்துக்குச்சென்றபோது வழியில் சூரியவெப்பத்தி னல் நடக்கச்சக்தியற்றவளாய்ச் சோர்ந்து பெருமூச்செறிந்து வி ழுந்தாள். அப்போது அவள் அரசனல் அனுப்பியசிவிகையின் பேரிலும் ஏருமல், பின்னேயும் திரும்பாமல், ஜலபானமும் செய் யாமல் மிகவைராக்கியத்துடன் ஒரேநினைவாய் இருந்துகொண்டு இன்றைக்குச் சிவதரிசனஞ்செய்யாமல்போனேனே என்று மிகவும் வருத்தமுற்ருள். உடனே அடியார்மனத் துயரத்தை அகற்றும் அருட்கடலாகிய சிராமலைநாதர் அங்குசுயம்புவடிவமாகத்தோன்றி காந்திமதி என்னும் சிவனடியாளுக்குத் திவ்யதரிசனம் கொடுத் தருளினர். தேவர்கள் திருவருளைப்புகழ்ந்து வருஷாகாலத்தைப் போல் பூமழைபொழிந்தார்கள். காந்திமதிஎன்பவள் சிவபெருமா னைத்தரிசித்துப் பிரதக்ஷணம்பண்ணிவணங்கி ஸ்தோத்திரங்கள் செய்து தனது அரண்மனைபோய்ச்சேர்ந்து முன்போலவே சிவதரி சனஞ்செய்து வந்தாள். சூரவாதித்தன் இவைகளைக்கேட்டு மிக வும் அதிசயித்துத்தனது மாதரசிக்குக் கிருபைசெய்தருளிய தான் தோன்றீஸ்வரருக்கு அழகிய ஆலயமும் கட்டுவித்து, நித்திய நை மித்திய முதலானவைகளையும் விசேஷமாய்ச்செய்வித்தான். காந் திமதியானவள் ஓர்புத்திரனைப்பெற்ருள். அப்புத்திரனும் தனது பி தாவைப்பார்க்கிலும் எண்மடங்கு அதிகமாய்ச் சான்ருண்மையா லும் அறத்தின்வழியாலும், சைவநூலின்தெளிவாலும், மேன்மை அடைந்தான். அவ்வரசகுமாரன் முதலாக நாற்பத்தொன்பது த லைமுறை அளவுமுள்ள மன்னர்கள்ஸ்வர்க்கம், மத்தியம், பாதா ளம் என்கின்ற மூவுலகங்களிலும் அழியாப்பெயரையும், புகழை யும்பெற்றுச் செங்கோல்செலுத்தி அஸ்வமேதயாகம், இராஜசூய யாகம் முதலியமகங்களைச்செய்து இந்திரலோகத்தை அடைந்து தேவபதவியைப்பெற்ருர்கள்.



உ

சிவமயம்.

# ௰. வது-உறையூரழித்தசருக்கம்.

உறையூரில் இராச்சியாதிகாரஞ்செய்துவந்த சோழராஜாக்களின் ஐம்பதாந்தலைமுறையில், வன்பராந்தகச்சோழன் என்பவன் மான்போன்றபார்வையும், இலட்சுமியைப்போன்ற அழகும் உள்ள தனது மனைவியாகிய புவனமாதேவியோடுங் கூடி இன்பத்தை அனுபவித்து உலகத்தை ஆண்டுவருங்காலத்தில் தவசிரேஷ்டராகிய சாரமாமுனிவர் நந்தனவனத்தில் உண்டாகிய வாசனைபொருந்திய செவ்வந்திமலர்களை எடுத்துச் சிராமலைநாதரை அனுதினமும் மிகஅன்போடு அர்ச்சித்து வந்தனர். அப்படி அர்ச்சித்துவருங்காலத்தில் பிராந்தகன் என்னும் மூடனான ஓர் பூவாணிகன் தினந்தோறும் அந்தப்பூந்தோட்டத்திற்சென்று அதிலுள்ள அழகிய செவ்வந்திப் புஷ்பங்களைத் திருட்டுத்தனமாய்க்கொய்து வன்பராந்தகன் என்னும் சோழராஜனுக்குக் கொடுத்துவந்தான். அவ்வரசன் தெய்வீகமாயுள்ள இந்தப் பூக்கள் சிவபெருமானுடையதிருமுடியில் சாத்தப்படத்தக்க சிறப்பையுடையது என்று எண்ணாமல் அவைகளைநாள்தோறும் கொண்டுவரச்சொல்லி ஆசையோடு தானும் தரித்துத் தன்மனைவியாகிய புவனமாதேவிக்கும் கொடுத்துவந்தான். கற்பிற்சிறந்த அம்மாதரசியானவள் அவைகளைச்சூட்டிக்கொள்ள அஞ்சிச் சிவபெருமானுக்குப் பிரீதிஆக்குவாள். பிரதிதினமும் சாரமாமுனிவர் பூஞ்சோலையிற் சென்று நூறு இதழ்களைஉடைய முட்செவ்வந்தி மலர்களைப்பார்க்கும்போது மிகுதியாக இராததினாலே மிகவும்துக்கித்துப் பின்பு அன்பிற்சிறந்த சிவனடியார்கள் யாராவது இந்தப்புஷ்பங்களை யெடுத்துச் சங்கரனாகிய சிராமலைநாதருடைய திருமுடிமேல் சாத்துகின்றார்களோ இல்லையோ என்று ஐயமுற்று அந்த நந்தனவனத்தில் புஷ்பித்திராநின்ற சில புஷ்பங்களைப் பறித்துக்கொண்டு சந்நிதியில்

போய்ச்சிவபெருமானுக்கு அர்ச்சனை செய்யும்போது முதல்நாள் தாம் சூட்டினசெவ்வந்திப் புஷ்பங்களன்றிச் சிவபெருமானுடைய திருமுடியில் அதிகமாக வேறு ஒருபுஷ்பமாகிலும் காணுதபடியினுலே மெத்தவுங்கிலேசமுற்று அழுதுகொண்டு பூங்காவனத்துக்கு வந்து பூக்களைத்தெரியாமல் எடுத்துக்கொண்டுபோகின்றவர்களைக் கண்டுபிடிக்கவேண்டுமென்று எண்ணி அவ்வனத்தில் அவர்மறைந்துகொண்டு இருந்தனர். அப்போது கள்வனுகிய பூவாணிகன் பரிமளம்பொருந்திய செவ்வந்திப்பூக்களை அஞ்சாமல்வந்து பறிக்கும்போது, சாரமாமுனிவர் அவனுடைய கையைப் பிடித்துக் கொண்டு அவனதுகழுத்திலேதமது உத்தரீயத்தைச் சுருக்கி அவனை இழுக்க, அவன் அவரைப் பலாத்காரமாய்த் தள்ளிவிட்டுத் தான்முன்னுக ஓடிப்போய் அரண்மனையிற்புகுந்தான். முனிவர் அவன்பின்னேசென்றபோது அரண்மனைவாயிலைக்காப்போர் அவரை உள்ளேபோக ஒட்டாமல்தடுக்க, ஓர்பிராமணோத்தமன் அவரை அரசனிடத்தில் கொண்டுபோய்விட்டான். அவ்வேந்தன்சாரமாமுனிவரை எதிர்கொண்டு வணங்கி அழைத்துப்போய் ஒரு பொன்னுசனம்கொடுத்து இருக்கும்படிசெய்து தேவரீர் இவ்விடத்துக்கு எழுந்தருளினது யாதுகாரணம் என்றுவினவச் சாரமாமுனிவர் மன்னனே பாதாளலோகத்திலிருந்து நான்வெகுபிரயாசையோடு செவ்வந்திப்புதல்களைப் பூலோகத்திலே கொண்டுவந்து பதித்துத் தண்ணீர்விட்டுப் பயிர்பண்ணி நன்றுய்வளர்த்து விர்த்திசெய்து அன்று அலர்ந்த பூக்களைக்கொய்து திரு மாலைகட்டி சிராப்பள்ளிச் செல்வருக்குக் குறைவில்லாமல் நாள்தோறும் சாத்திவருவேன். சிவபெருமானுக்கு அற்புதமாயுள்ள அந்தமலர்களைத் தினந்தோறும கள்ளத்தனமாய்க்கவர்ந்துகொண்டுபோகின்ற உம்முடைய பூவாணிகனுகிய இந்தப்பரமசண்டாளனை நீர் தண்டிக்க வேண்டும் என்றுசொல்லிப் பின்னும் கூறுவார்.

கேளும் இராஜனே ! சோழதேயத்திலே கருவூர் என்னும் ஸ்தலத்தில் சிவனடியாராகிய சிவகாமி ஆண்டார் அன்போடு அர்ச்சிக்கும் பொருட்டு கொண்டுவந்த திருப்பூங்குடலையிலுள்ள புஷ்பங்களைச் சோழராஜாவாகிய புகழ்ச்சோழ நாயனுரது பட்டத்துயானையானது மதத்தினுல்பறித்து எறியச்சிவகாமி ஆண

டார் மிகவுந்துன்புற்று இருத்தலைக்கண்டு எறிபத்தநாயனார் அந்த யானையையும், பாகனையும் தமது மழுவாயுதத்தால் வெட்டிக் கொன்றனர். இதுசெய்தி அரசர்கேட்டுவந்து நாயனாரது திருவடிகளில்வணங்கி அபசாரஞ் செய்தயானையையும், பாகனையுங்கொன்றதனால் தீராது, அடியேனையுங் கொல்லவேண்டும் என்று உடைவாளை நாயனாரது கையில்கொடுத்தனர். நாயனார் அரசரது பக்தியைநோக்கி வாளைத்தமது கழுத்திலேவைத்தவுடன் அவ்வாளை அரசர்பிடிக்கச் சிவபிரான் அதை அறிந்து பாகனுடன் யானையையும் பிழைக்கச்செய்தும், சிவகாமிஆண்டார் மகிழும்படி பூக்குடலையில் முன்போல மலர்கள் உண்டாகும்படி செய்தும் அருளினர். அதன்பின்புமன்னர் எறிபத்தரைப் பட்டத்துயானையின் பேரில்ஏற்றி நகர்வலம் செய்வித்தனர்.

பல்லவர்குலத்து இராஜாவாகிய கழற்சிங்கநாயனார் தமது மனைவியாருடன் சிவபிரான் எழுந்தருளியிருக்கும் ஆலயங்கள் தோறும் சென்றுதரிசித்துத் திருவாரூரில் சிவசந்நிதியில் தேவதேவனைச்சேவித்து நிற்கையில் திருப்பூம்பலகையின் பக்கத்தில் ஒரு புதுப்பூவிழுந்திருக்க அதை அரசரின்தேவியார் எடுத்துமோந்தனர். அப்போது எழுந்தருளிய அன்பிற்சிறந்த செருத்துணைநாயனார் கண்டுசிவபெருமானுக்கு உபயோகப்படுகின்ற புஷ்பத்தை நீ மோகலாமோ என்றுமூக்கை அரிந்தனர். அதைக்கண்ட அரசர் தமது உடைவாளை உருவி முதலில் பூவை எடுத்தது கையல்லவோ என்று கையைத்துணித்தனர். இவைகளால் சிவபக்தியும், அடியார்நேசமும்உள்ள அவ்விரண்டு இராஜாக்களுக்கும் மண்ணுலகத்திலும், விண்ணுலகத்திலும், அழியாதபுகழும், கீர்த்தியும் உண்டாயிற்று. கேட்டீரோமகாராஜனே! மகா அசுத்தமும், அநித்தியமும் பொருந்திய இந்தச்சரீரத்திலுள்ள தலைமயிரானது சிக்குநாற்றத்தையும், ஈர்களையும், பேன்களையும்கொண்டிருக்க அதில், சிவபெருமானதுதிருமுடியில்அணிகின்ற செவ்வந்திப்புஷ்பங்களை நீர்தரிப்பது நீதி அன்று. கரியகாலனானவன் உயிரைக்கொண்டுபோனபிறகு இந்த உடலானது விறகுகளாகிய புஷ்பசயனத்தில் நெருப்பானது பொருந்தும்பொழுது பிணநாற்றம் உண்டாவதல்லாமல் இந்தச்செவ்வந்திப் பூவின் மணநாற்றமானது

வீகமோ. சிவபெருமானுக்கு விட்ட கிராமங்கள், மகமைகள், நெல் முதலானதானியங்கள், தனங்கள், பொன்முதலிய நவமணிகள், ஆடை, ஆபரணங்கள், தானபதார்த்தங்கள், பூஜாதிரவியங்கள், அரிசி முதலியபண்டங்கள், மண்டபம், முதலானவைகள், பசுமுதலான நாற்கால்மிருகங்கள், சண்டிகேஸ்வரருடைய சந்நிதிமுன் கொடுத்தமாலைகள், ஆபரணங்கள், அன்னங்கள், வஸ்திரங்கள், முதலானசிவசொத்துக்களை மாக்ஷிமையுடையபெரியோர் அபகரிக்கஎள்ளளவும் மனதில்நினையார். அச்சிவசொத்துக்களில் அணுவளவு ஆசைவைத்து அபகரிக்கின்றவர்களும், அவைகளைப்பரிபாலனமும், விர்த்தியுஞ் செய்யாமல் துர்விநியோகஞ் செய்கின்றவர்களும், அவ்வாறு துர்விநியோகஞ் செய்கின்றவர்களைப் பார்த்துத் தண்டனைசெய்யாமல் இருப்பவர்களும் ஏழுகோடிநரகங்களை நண்ணி யமனால் தண்டிக்கப்பட்டும், மகத்தானதுன்பங்களை அனுபவித்தும், அந்தப் பாவங்கள் தொலையாமல் பூமியில்பிறந்து அவலமான கஷ்டங்கள் பொருந்திய வெப்பமான குழிகளிலே புழுக்களாயும், பன்றிகளாயும், கோழிகளாயும் கோடிஜன்மங்கள் எடுத்து உழல்வார்கள். பிறகு மனிதர்களாய்ப்பிறந்து எந்நேரமும் துக்கங்களையும், பிணிகளையும், பயித்திய குணத்தையும், கடனையும், வறுமையையும், அபகீர்த்திகளையும் அடைந்து வருந்திச் சுழல்வார்கள். தன்னுட்டிலுள்ள குற்றங்களை ஆராய்ந்து நீதிசெலுத்தாதமன்னன் தன்னுட்டை இழப்பன். குடிகள் அழுதகண்ணீரானது கொடுங்கோல்வேந்தனது செல்வத்தைக்கெடுக்கும் வாளாயுதமாகும். இராஜனதுதொழிலானது குடிகளைக்காத்துக்குற்றங்கடிதலும், உழவன்பயிர்க்குக் களை எடுத்தல்போல வேந்தன்கொடியவரைத்தண்டித்து, நல்லோரைக்காத்தலும் மன்னனுடையசெங்கோல்முறைமையாகும் என்று கொடுங்கோல், செங்கோல் முறைமைகளையும், இன்னம் பலநீதிவாக்கியங்களையும் போதித்தனர்.

அதற்கு அரசன் பூவாணிகனை எதிராக நிறுத்தி நகையோடுங்கூடிய மொழிகளால்நீநந்தனவனத்திற் சென்று புஷ்பங்களைப் பறித்துவந்ததுண்டோ இல்லையோ என்று வஞ்சனையாகக் கேட்டான். அப்போது அந்தப்பூவாணிகன் இராஜனைநோக்கி இந்த

முனிவர் சொல்லியது பொய்யாய் இருக்கின்றது. அவருடைய நந்தனவனத்தை நான் சொப்பனத்திலும் கண்டதில்லை. எவர்கள் அந்தப் புஷ்பங்களை எடுத்துக்கொண்டு போனார்களோ தெரியவில்லை என்று நாவினால் அஞ்சாமற்சொன்னான். அதற்கு அரசன் தனக்கு அழியுங்காலம் வந்துவிட்டபடியால் உடனே அவனைத் தண்டனை செய்யாமல் முனிவரே உம்முடைய பூஞ்சோலையில் பூவாணிகனைச் சொல்லாமல் இருக்கும்படி செய்வோம் நீர் போம்என்று அலக்ஷியமாய்ச் சொன்னான். அம்முனிவர்இராஜனே! தக்கனாகிய தக்ஷப்பிரசாபதி செய்தயாகமானது எப்படி அழிந்து தவிடுபொடியாய் விட்டதோ அப்படியே உன்னுடைய அரண்மனை முதலியமாளிகைகளும், வாழ்வும், இராஜாங்கமும் அழிந்து புழுதி பறந்து போகக்கடவதென்று சாபம் கொடுத்துப்போயினர். உடனேமன்னன்மிகவும் கோபம்கொண்டு "அந்தநந்தனவனத்தில் ஒரு புஷ்பமாவது இல்லாமல் சாரமாமுனிவனுக்குத் தெரியும் படிதினந்தோறும் பறித்துக்கொண்டுவா" என்றுசொல்ல அவனும் அவ்வாறுகொய்து கொடுத்து வந்தனன். அதைப்பார்த்திருந்த சாரமாமுனிவர்மனது நொந்து ஸ்ரீசிராமலை நாதர் சந்நிதியில் சென்று முறையிட்டு அழுதனர்.

அப்போது சிராப்பள்ளிச் செல்வர் அவருக்குக் கட்டளையிட்டு அருளியபடி அவர்உறையூரில் சென்று "சிவார்ச்சனைசெய்வோரும், சிவனடியாரை வணங்குவோரும், குருவாக்கின் படி நடப்போரும், ஏழைகளுக்குக் கொடுப்போரும், விருத்தாப்பியரும், வேதாகமங்களை வாசிப்போரும், சிவபணிவிடை செய்வோரும், யாகங்களைச்செய்வோரும், கற்புடையமாதரும் செவியுறுக்கேளுங்கள்" என்று சொல்லத்தொடங்கினார். அதாவது இன்றுமுதல் ஏழுதினத்தில் இந்த உறையூர்ப் பட்டினமும், இதை ஆள்கின்ற அரசனும், துஷ்டர்களாயுள்ள அவன் சுற்றத்தார்களும், சேனைகளும், சேனாதிபதிகளும், மந்திரிமுதலானவர்களும் கனகசபையில் திருநடனஞ் செய்கின்ற சிவபெருமானுடைய ஆக்கினையின்படி மண்மாரியினால் அழிந்துபோவது நிச்சயம்" என்று வீதிகள்தோறும் பிரசித்தப்படுத்தினர். பரிசுத்தமுள்ள நல்லோர்கள் அதைக்கேட்ட மாத்திரத்தில் அந்த ஊரைவிட்டுப்

போய்விட்டார்கள். தீயரானதுஷ்டர்கள் சாரமாமுனிவர் சொல்லியதைப் பொய்யாகஎண்ணி அலக்ஷியமாய் இருந்துவிட்டார்கள். தாயைப்போலக் கருணையைச் செய்கின்ற சிராமலைநாதர் வாயுதேவனையும், சப்தமேகங்களையும் வரவழைத்து "நான்கு வேதங்களை உணர்ந்த சாரமாமுனிவன் நம்மை அன்போடு அர்ச்சிக்கத் தக்க செவ்வந்தி மலர்களைக் கொய்துவரச்சொன்னவன்பராந்தகச் சோழனும் அவனுடைய பட்டினமும், அவனது சுற்றத்தார்களும் விந்தமலைபோல் பூமியில் புதைந்து போகும்படி மண்மாரியாகவருஷியுங்கள்" என்று ஆக்ஞாபித்து விடுத்துத் திரிபுராந்தகராகிய தாமும் மேற்குமுகமாய் எழுந்தருளினர். உடனே கரிய மேகங்களின் கூட்டங்கள் எல்லாம் ஆகாயத்தில் மின்னி இடித்து அதிர்ந்து ஆரவாரஞ்செய்து எழுந்துமண்ணும், மழையும், நெருப்புமாகச் சொரிந்தன. சண்டமாருதமான காற்றானது சுழன்று உறையூரிலிருந்த ஜனங்களெல்லாம் சலிக்கவும், அந்தப்பட்டினம் எட்டுத்திசைகளும் சுழலவும், மாடமாளிகை, கூடகோபுரங்கள் முதலியன இடிந்து விழவும், குளங்கள், கிணறுகள் முதலியன தூர்ந்து போகவும்; மலைகளைப்போலவும், அவைகள் பெறுகின்ற சிறுகுன்றுகளைப் போலவும் பலகுவியல்களாக மண்கள் திரண்டு மேடிடவும் வீசிற்று. சிலர் அருந்தவசியாகிய அந்தச்சாரமாமுனிவர் சொன்னதை நாம்பரியாசஞ் செய்து உயிரை இழந்தோம் என்று சொல்லிப்பிராணனை விடுவார்கள். சிலர்பெற்றோர்கள், மைந்தர்கள், சுற்றத்தார்கள் சிநேகிதர்கள், இறந்துபோயிருப்பதைக்கண்டு மனம் உருகி அழுவார்கள். சிலர் மழைக்குக் குடைபிடித்துக்கொள்வது போலத்தங்கள் தங்கள் கையிலிருக்கிற குழந்தைகளாலே தங்கள் தங்கள் உடலை மறைத்துக் கொள்வார்கள். இறந்து கிடக்கின்றபெரியயானைகளின் அகன்றவாய்களினிடத்தே போய்ச்சிலர் நெருப்பு மழைக்குப்பயந்து நுழைவார்கள். இவ்வாறு உறையூரிலுள்ள ஜனங்களெல்லாம் திரிபுரங்களும் வெந்தெரியும்போது அவைகளுக்குள்ளே அகப்பட்டமுப்புராதிகளைப்போல் ஆனார்கள். மகாபாவியாகிய வன்பராந்தகச் சோழன் தன்னுடைய பட்டினத்திலுள்ள ஜனங்கள்படுகின்ற துன்பங்களைக்கண்டு மிகவும் பயந்து தனது பட்டஸ்திரியுடனே குதிரைமேல் ஏறிக்கொண்டு மேற்றிசை நோக்கிச்சென்றான். மண

மாரியும் அவனைத்தொடர்ந்தது. பின்பு அவன் வடதிசைநோக்கிச் சென்று காவிரி ஆற்றைக்கடக்கையில் அவனுடைய மனைவியாகிய புவனமாதேவியானவள் தனது கர்ப்பமுதிர்ச்சியால் சரீரம் தளர்ச்சி அடைந்து பொன்னி ஆருகிய காவிரிநதியில் தவறிவிழுந்துவிட்டாள். கொடியசண்டாளனுகிய அவ்வரசன் அவளைஎடாமல் தான் பிழைத்தால்போதும் என்று குதிரையை வேகமாய் விட்டான். உடனேஅவன்மண்மாரியினாலும், சண்டமாருதக்காற்றினாலும் அடிபட்டு நொந்து குதிரையுடன் மண்ணில் புதைந்து மாண்டான்.

கிருபாநேத்திரங்களால் அருளாகிய பெரியமழையை மெய்யடியார்களிடத்தில் பொழிந்திடுகின்ற கடவுளாகிய ஸ்ரீ செவ்வந்திநாதர் மண்மாரிபெய்கின்ற மேகங்களையும், சுழன்று வீசாநின்றகாற்றையும் நோக்கிப் புண்ணியஞ்செய்யாத பாவியாகிய சோழராஜன் இருந்த உறையூர்நகரத்தை நீங்கள் அழித்ததுபோதும் இனிச்செல்லுங்களென்று கட்டளை யிட்டருளினார். அவைகளும் மறைந்தன. அக்கினிமயமான திருமேனியையுடைய சிவபெருமானுக்கு அணிகின்ற செவ்வந்திமலர்களைத் தன்முடியில் அணிந்த வன்பராந்தகச் சோழனனவன் மண்ணிலேபுதைந்து அழிந்த விருத்தாந்தங்களைச் சொன்னோம். இனி அவன் மனைவியாகியபுவனமாதேவியானவள் காவிரி ஆற்றில் விழுந்து கரையேறித் துன்பமில்லாமல் இன்பத்தோடுவாழ்ந்திருந்த கதையைக் கூறுவாம்.

காவிரிநதியில் விழுந்த பூரணகர்ப்பத்தையுடைய அந்த மாதரசியானவள் தண்ணீரில் மூழ்கி நீர்ச்சுழிகளில் சுழன்று மிகவருத்தப்பட்டுப் பிராணலயம் இல்லாமல் வெள்ளத்தில் மிதந்துபோய்த் திருவருளால் ஆற்றங்கரை சேர்ந்தனள். அங்குகிருபாநேத்திரமுடைய பிரமமா நதி என்னும் ஓர் பிராமணன்தவத்தைச் செய்து கொண்டு இருந்தான். அரசனுடையதேவியானவள் கரையோரமாய் மிதந்து வருதலைப்பார்த்து அவளை எடுத்து அவளுடைய துன்பங்களை எல்லாம் நீக்கித் தேற்றிப்பெண்ணே நீயாருடைய மனைவி? உன்வரலாறுயாது? என்றுவினவ; இராஜஸ்திரியானவள் தனது பூர்வோத்திரங்களை விவரமாய்ச்சொல்லிப் பிராமணோத்தமரேநீரேஎனக்குமாதா, பிதா, குரு, தெய்வம்ஆதலால்நான்உமக்கு

அடைக்கலம் என்றனள். அவைகளைக்கேட்ட அந்தணன் அவளைத் தனது கிரகத்துக்கு மெள்ள அழைத்துக்கொண்டுபோய்க் கர்ப்பமாகவந்த சீதாதேவியை வால்மீகிரிஷி பாதுகாத்து வந்ததுபோல அவளுக்கு அறுசுவை அமுது அளித்து இராஜோபசாரஞ்செய்து சம்ரக்ஷணை செய்துவந்தனன். புவனமாதேவிக்குப் பத்துமாதங்களும் சென்று பேறுகாலம் ஆகுகின்ற தினத்திலே ஓர் அழகியமுனிவர் அவ்விடத்தில் சென்று இந்த இராஜஸ்திரியானவள் இன்னமிரு நாழிகை கழித்து ஓர்புத்திரனைப்பெறுவாளாகில் இவளுக்கு எல்லாநன்மையும், மேன்மையும் உண்டாகும் என்று சொல்லிப்போயினார். அதைக்கேட்ட இராஜபத்தினியானவள் ஒருநாழிகைபரியந்தம் தனது இரண்டுகால்களும் மேலாக நின்றனள். பின்பு அவள் முனிவர்சொன்னபடி நல்லலக்னத்தில் மூவுலகங்களையும் ஆளத்தக்க மகாபலம்பொருந்திய ஓர் ஆண்குழந்தையைப் பெற்றாள். அக்குழந்தையும் மூன்றாம்பிறையைப்போல் வளர்ந்துகொண்டுவந்தது. கிருபையை உடைய சாரமாமுனிவர் அந்த உறையூர்ப்பட்டினமானது தன்நிமித்தம் அழிந்துபோய்விட்ட காரணத்தால் மண்மாரிக்குத் தப்பிப் பிழைத்து ஜீவித்திருக்கின்ற நல்லொழுக்கமுள்ள மந்திரிமுதலானவர்களிடத்தில் சென்று பழமையாயுள்ள மந்திரிகளே! இந்தச் சோழமண்டலமானது இராஜா இல்லாமல் காடுகளால் மூடப்பட்டிருப்பது ஞாயமல்ல. புலிக்கொடியை யுடைய சோழராஜனானவன் கோழிமாநகரத்தை விட்டுக்காவிரி ஆற்றைக் கடக்குங்காலத்தில் அந்தராஜனுடைய தேவியானவள் ஆற்றிலேதவறிவிழுந்து கர்ப்பத்தினால் வருத்தப்பட்டுக் கரைசேர்ந்து ஓர் வேதியனுடைய கிரகத்தில் ஓர்குமாரனைப்பெற்று உயிரோடு இருக்கின்றாள். அப்புத்திரனே இந்த இராஜாங்கத்துக்கு உரியவனாவான் என்று சொல்லிச்சாரமாமுனிவர் தமது இருப்பிடத்துக்குச்சென்றார். மந்திரிமார்கள் சாரமாமுனிவர்சொன்ன வார்த்தையைச் சிரமேற்கொண்டு பட்டத்துயானையை அனுப்பினார்கள். அந்த யானையானது காவிரிதீரத்தை அடைந்து சிறுபிள்ளைகளுடனே மணலினால் சிறுவீடுகள்கட்டி விளையாடிச், சிற்றில்களைக்காலால் சிதைத்துக்கொண்டிருக்கின்ற இராஜகுமாரனைக்கண்டு வணங்கித்துதிக்கையினால் அவனை எடுக்கத்தலைப்பட்டது. பக்கத்திலிருந்த சிறுவர்கள் பயந்து கூவிக்கொண்டு அவனுடையதாயாரிடத்தில்வந்து

உன்னுடைய குமாரனை ஒருபெரியயானைவந்து தும்பிக்கையினலே எடுத்து அசைத்தது என்றுசொல்ல; அவள் வாயில் அறைந்து கொண்டு பிராமணனிடத்தில் சொல்ல, அந்தப்பிராமணன் அவ்வி டத்திற்சென்று யானையானது இராஜகுமாரனைத் தூக்கக்கூடாமல் இளைத்து நிற்கின்றதைக்கண்டு அதிசயித்து இராஜஸ்திரியை அழைத்து விறகுக்கரியினல் உன்புத்திரனுடைய உள்ளங்காலில் கீறுவாயென்றுசொல்ல அவளும் அவ்வாறு கீறினள். உடனே கரிய யானையானது இராஜபுத்திரனைத் தூக்கித்தன் மத்தகத்தில் வைத்தது. அப்போது இராஜகுமாரனானவன் உதயகிரியின் உச்சியில் தோன்றிய சூரியனைப்போல விளங்கினன். இதைக்கண்ட புவனமாதேவியானவள் சிவன்செயல்என்று தேறினள். வேதோத்தமனாகிய பிராமணனும் ஆசிர்வாதங்கூறினன். பிராமணர்கள் புஷ்பங்களைத்தூவினர்கள். யானையானது மகிழ்ச்சியுடனே இராஜபுதல்வனை மத்தகத்தின்பேரில் சுமந்து கொண்டுபோய்க் கிருபைபொருந்திய திருமலைக்கொழுந்தர் சந்நிதானத்தில் வைத்தது. அப்போது வந்திருந்த பழமையாகிய மந்திரிகளும், தந்திரிகளும், சேனைவீரர்களும், சோழவமிசத்தர்களும் சமுத்திரம்போலச் சூழ்ந்துகொண்டு இராஜமைந்தனுக்கு மகுடஞ்சூட்டிக் கரிக்காலச்சோழமகாராஜன் என்று பெயரிட்டழைத்தார்கள். கரிக்காலச்சோழமகாராஜாவானவன் மனுநீதியின்படி குடிகளிடத்தில் ஆறில் ஒரு பங்கு கடமை வாங்கிக்கொண்டும், சிவாலயங்களைப் பிரதிஷ்டை செய்தும், காவிரி ஆற்றுக்குக் கரைகள்கட்டியும், கால்வாய்களை வெட்டியும், வயல்களை உண்டாக்கியும், சேரனும், பாண்டியனும் திறையிடும்படியாகச் செங்கோல் செலுத்தி ஆதிசேஷனுடைய முடியிலுள்ள பூபாரத்தை நீக்கி ஆண்டுவந்தான்.

நெடுங்காலமாய்ச்செவ்வந்திமலர்களால்தம்மைப் பத்தியினல் அர்ச்சித்துவந்த சாரமாமுனிவரது அரியதவத்துக்காகக் கிருபை கூர்ந்துஸ்ரீசெவ்வந்தீஸ்வரர்அவர்முன்விடையின்மேல் பிரசன்னராகி அன்பனே நீ விரும்பியது யாது என்று திருவாய்மலர்ந்தருளச் சாரமாமுனிவர் சுவாமியினது திருவடிகளில் நமஸ்கரித்துக் கைகூப்பி நேத்திரங்களிலிருந்து ஆனந்தபாஷ்பம்பொழிய நின்று, அருமையான செவ்வந்திப் புஷ்பத்தையும், அழகியசந்திரனையும், பரிசுத்தமுள்ள கங்கையையும் திருமுடியில் அணிந்தருளியகடவுளே

அடியேன் பரகதியாகிய திருவடி முத்தியை அடையும்படிகிருபை பாலிக்கவும், இந்தக்கதையைக் கேட்கவிரும்பினோர்கள் யாவரும் சிவகதியைப் பெறவும் தேவரீர்வரங்களைத்தந்து அருளவேண்டும் என்று பிரார்த்திக்கச் சிவபெருமான் அவ்வாறு அனுக்கிரகஞ் செய்து அந்தரத்தானமானார்.

உ

சிவமயம்.

# கக. வது-தாயான சருக்கம்.

ஸ்ரீ பரமசிவத்தினது திருவருள்பெற்று விளங்கும் ஸ்ரீ அறுபத்து மூன்று நாயன் மார்களுள் ஒருவராகிய இல்லையே என்னாத இயற்பகை நாயனாரும், பட்டினத்துப்பிள்ளையாரும் திருவவதாரஞ்செய்ததும், மூன்றுங் குடியான வைசியத்தலைவர்களெல்லோரும் கப்பல் யாத்திரை செய்து அளவில்லாத பொருளைச் சம்பாதிக்கப்பட்டசமஸ்த பாக்கியங்களெல்லாம் உண்டாகின்றதற்கு இடமாயுள்ளதுமான சகல வளப்பம் பொருந்திய காவிரிப்பூம்பட்டினத்திலே தனவைசியர் குலத்தில் பிறந்த உதாரகுணமுள்ள தனபாலன் என்னும் ஓர் வைசியன் இருந்தான். அவன் கற்பிற்சிறந்த தத்தையென்கின்றதனது மனைவியுடன் இல்லற தருமத்தை வழுவாது நடாத்தும்நாட்களில் புத்திரப்பேற்றை விரும்பி ஒப்பற்ற ஸ்ரீ கயிலாயபதியைக் குறித்துத்தவத்தைச்செய்து வந்தனன். பின்பு திருவருளால்அவன் சிவபக்தியுள்ள ஓர் சற்புத்திரியைப்பெற்று அப்புத்திரிக்கு இரத்தினவதிஎன்னும்திருநாமம்வைத்து அருமையாகவளர்த்து இன்பத்தோடு வாழ்ந்துகொண்டிருந்தான். மன்மதனும் திறையிடும்படியான பேரழகையுடைய தவத்தில் தோன்றிய அப்பெண்ணைத்திரிசிரபுரத்தில் வாழும் குபேரசம்பத்துள்ள தனகுத்

தன் என்னும் ஓர் வைசியனுக்கு விவாகஞ்செய்து கொடுத்தான். பின்பு அவ்விருவரும் இரதியும், மன்மதனும் போலக்காம இன்பத்தை அனுபவித்துக் கொண்டிருக்குங் காலத்தில் தனகுத்தன் என்பவன் கிளியைப்போலும் சொற்களையுடையதன்மனைவியுடன் தனது பதிக்குப்போக வேண்டும் என்று மாமனாராகிய தனபாலனுக்குத்தெரிவித்தனன். தனபாலன் மிகவும் சந்தோஷமடைந்து தனது மருமகனுக்கும், மகளுக்கும் சீராக விலையுயர்ந்த ஆடை, ஆபரணங்களையும், அளவிறந்த நவரத்னங்களையும் கொடுத்துஅனுப்பினன். அவர்கள் இருவரும்தனபாலனிடத்தில்விடைபெற்றுத்திரிசிராமலையைஅடைந்தார்கள். பின்புஇரத்தினவதியார் அம்மலையில்எழுந்தருளியஸ்ரீமட்டுவார்குழலாம்பாசமேதராகியஸாக்ஷாத் ஸ்ரீசெவ்வந்திலிங்கேஸ்வரரைச் சுக்கிரவாரந்தோறும்தவறாதுதரிசனம்செய்துகொண்டுவந்தனர். அவ்வண்ணம்தரிசித்துவருங் காலத்தில் பிதாவாகிய தனபாலன் சிவபதம் அடைந்தனன். அப்போது இரத்தினவதியார் மிகவும் கிலேசமுற்றுப்பின்பு கணவனுடையபோதனைசக்தியினாலும், சரீரம்அநித்தியம்என்னும்விவேகத்தினாலும் துயரம் நீங்கி யாவரும் மகிழும்படி நற்குண நற்செய்கையால் ஒழுகியும், தாம்கொண்ட சிவவிரதத்தை அனுஷ்டித்தும், விருந்தினரை உபசரித்தும், தமது கணவனோடு வாழ்கின்ற நாட்களில், திருவருளால் அவர் வயிற்றில் நாளுக்கு நாள் இளம் பிறைபோல் கர்ப்பம் முதிர்ந்தது. அவரது செந்தாமரைப்பூவையொத்த முகமும், குமுதமலர்போன்றவாயும் வெளுத்து, முலைக்கண்களும் கறுத்து, தனத்தில் சந்தனத்தால் எழுதிய கோலமும் நீங்கிற்று. அவரைப்பெற்ற தாயார் மிகவும் ஆசையுடனே தன்மகளைக்காணும் பொருட்டு நல்ல ஆடை, ஆபரணங்களையும், காயம், தேன் முதலிய மருந்து வகைகளையும் எடுத்துக்கொண்டு காவிரிப்பூம் பட்டினத்தைவிட்டுப் புறப்பட்டு வரும்போது காவிரியின் பெருக்கால் தடைபட்டனள். இது நிற்க.

இரத்தினவதியார் இதை அறியாதவராகி ஆபத்து காலத்தில் தாயைப்போல் உதவுவாருண்டோ சுவாமீ யான் என்னசெய்வேன் மாதாவும் வந்து சேரவில்லையே என்று தாம்வழிபடும் கடவுளாகிய ஸ்ரீ செவ்வந்திநாதரைப்பலவாறுகப்பிரார்த்தித்துக்கொ

ண்டு இருந்தனர். அப்போது சங்கரனையும், சிவனையும், சதாசிவனையும், ஈசானனையும், புங்கவனையும், திரிபுராந்தகனையும், புராதனனையும், புராணனையும், கங்காதரனையும், நீலகண்டனையும், நெற்றிக்கண்ணனையும், எங்கள் நாயகனையும், நிராமயனையும், பூரணனையும், பரனையும், பராபரனையும், வெள்ளியம்பொருப்பனையும், காரணனையும், மதனாந்தகனையும், காலகாலனையும், யானையை யுரித்தவனையும், மறைப்பொருளை வகுத்தோனையும், நாரணன், பிர்மாதி தேவர்களுக்குஅரியனையும், அடியவர்களுக்குஎளியனையும், ஸ்ரீமட்டுவார்குழலம்மைக்கு நாயகனையும், பரமபிதாவாகிய ஸ்ரீ சிராமலைநாதன் பக்தியிற்சிறந்த இரத்தினவதியாரது மனத்துயரத்தை அகற்றும்பொருட்டுத் "தாயினும் நல்ல சங்கரன்" என்ற திருவாக்கின்படி இன்னருள் கூர்ந்து தாம் அவரது தாயைப்போல விருத்தவடிவங்கொண்டுதமது திருக்கரங்களிலுள்ள, மான்,மழுவையும் கரந்தும், ரிஷபத்தை மறைத்தும், தில்லையம்பலத்தில் ஆடலை ஒழித்தும், நரைத்த மயிரையுடைய கூந்தல் அசையவும், திருக்கரத்தில் செங்கோல் துலங்கவும், அழகிய முகமண்டலம் அசையவும், திருநுதலில் வெயர்வைத்துளிகள் முத்துப்போல் பிரகாசிக்கவும், திருக்கழுத்தில் ஓர் திவ்யாபரணம் மின்னவும், தமது இடப்பாகத்திலுள்ள ஸ்ரீ மட்டுவார் குழலம்மை, திருச்சடையிலுள்ள சிவகங்கை ஆகிய இரண்டு பெண்களாலும் கலசத்தில் தேனும், எண்ணெயும், பேழைப்பெட்டியில் விலை உயர்ந்த ஆடை, ஆபரணங்களையும், காயம்முதலிய பண்டங்களையும் எடுப்பிவித்துக் கொண்டு இளைப்பும், பெருமூச்சும் உண்டாக மெள்ள மெள்ள நடந்து இரத்தினவதியாரது வீட்டில் எழுந்தருளினர். உடனே இரத்தினவதியார்தமதுதாய்வந்து விட்டதாகமிகவும் சந்தோஷமடைந்துகர்ப்பமுதிர்ச்சியினால்தள்ளாடிநடந்துஅவரை எதிர்கொண்டுஅழைத்துவந்துஆசனங்கொடுத்துப் பிர்மா, விஷ்ணு, இந்திராதி தேவர்களாலும் அறியப்படாத அழகிய திருவடிகளில் வீழ்ந்து நமஸ்கரித்து அஞ்சலிசெய்துநின்றனர். தாயாகவந்த ஸ்ரீதாயுமான தயாபரமூர்த்தியானவர் ஆசீர்வாதஞ்சொல்லி அவரை ஆலிங்கனஞ்செய்து அவரது உச்சியையும், முகத்தையும் மோந்து வேதங்களை அருளிச்செய்த தமது அருமைத்திருவாக்கினால் இனிய

வசனங்களைச்சொல்லித்தமது திருக்கரங்களால் அவரது கண்ணின் நீரைத்துடைத்துத்தேற்றினர். உடனே இரத்தினவதியார்கவலை நீங்கி மிகக்களிப்படைந்து ஸ்ரீபரமசிவமாகியதாயின்பின் வந்தஸ்ரீபார்வதி,கங்காதேவிஎன்கின்றஇரண்டுபெண்களுக்கும் அறுசுவை அமுதுஅளித்துப்பின்புஅவ்வன்னையோடு உண்டு மகிழ்ந்து இருந்தனர். மறுநாள் அப்பெண்ணுக்குப்பிரசவவேதனை உண்டாயிற்று. ஸ்ரீதாயானசெல்வர் மிகக்கருணை கூர்ந்து இரத்தினவதியாரை மார்போடு அணைத்து அவரது சரீரமுழுவதும் தயிலம் முதலியவற்றைத்தடவி மருத்துவத்தொழில்களை எல்லாம் செய்தருளினர். இரத்தினவதியார் திருவருட்டுணையால் யாதொருவருத்தமின்றி ஓர் சற்புத்திரனைப்பெற்றனர். பின்பு சிவபெருமான் அவருக்கு அருமையான மருந்தெண்ணெயும், கொடுத்து ஏழுநாள் வரையில் செய்யவேண்டிய தொழில்களைஎல்லாஞ் செய்து, ஒருமாதபரியந்தம் அப்புதல்வனைத் தொட்டிலிட்டுச் சீராட்டித் தமது திருக்குமாரராகிய ஸ்ரீ சிவசுப்பிரமணியக் கடவுளைப்போல வளர்த்துக்காத்தருளினர். கண்களாலே பார்க்கிறதற்கு மிகவும் அருமையாய் இராநின்ற சிறுகறையான், சிற்றெறும்புகள், அவைகளின் வயிற்றிலுள்ள கருவாகிய இளஞ்சினைகள், கல்லினுள்ளே இருக்கின்ற தேரைகள், மிருகபக்ஷிகள், தாவரப் பொருள்கள், பாவபுண்ணியங்களைச்செய்கின்றமனிதர்கள்,தேவர்கள், இந்திரன், பிர்மா, விஷ்ணுக்களையும் வளர்த்துக்காத்து அருளாநின்ற இறையாகிய ஸ்ரீசிரமலைநாதர் இப்போது பிரசன்னமாய்வந்து ஓர் குழந்தையை வளர்த்தது புதுமையோ கேளுங்கள், வேதங்களையுணர்ந்த முனிவர்களே! என்று வியந்து பின்னுங்கௌதமமுனிவர் கூறுவார்.

காவிரிப்புனல்வற்ற இரத்தினவதியாரைப் பெற்றதாயாகிய தத்தைஎன்பவள் தனது மகளுடைய கிரகத்துக்கு வந்து ஸ்ரீ பரமசிவமாகிய தாயினெதிர்முகமாயிருந்தனள். தனகுத்தன் இந்த இரண்டுபேர்களில் தனது மாமியாவள் என்று சந்தேகப்பட்டு நின்றனன். இரத்தினவதியார் இவ்விருதாயர்களில் தமது தாய்யாவள்என்றுமருண்டகாலத்துஸ்ரீசுகந்தகுந்தளாம்பாசமேத அகண்டபரிபூரண சச்சிதானந்த சுவரூபராகிய ஸாக்ஷாத் ஸ்ரீ மாதுர்பூதேஸ்வரசுவாமியானவர் தாம்கொண்டதாய் வேடத்தைமறைத்து மான், மழு, சதுர்ப்புஜ, காளகண்ட, திரிநேத்திர, ஜடாதர, கங்காதர, சந்திரசேகர, பஸ்மருத்திராக்ஷதரராய் உலகமாதாவாகிய ஸ்ரீ மட்டுவார் குழலாளொடு, மால்விடையில் இட்டமாய் உகந்து ஏறி, ஆகாயத்தில் இருபது விற்கிடைதூரத்தில் மந்தரகிரியில் தோன்றிய மாணிக்கமலையைப்போல விளங்கினர். அப்போது சிவபெருமான் தமது திருமுடிக்கு மேல் சந்திரவட்டக்குடையானது பூர

ண சந்திரனைப்போல்பிரகாசிக்கவும், இருபுறமும் சாமரைகளும், ஆலவட்டங்களும் அசையவும், தும்புருநாரதர் இன்னிசை பாடவும், விஷ்ணு,பிர்மாதிகடவுளர், இந்திராதி தேவதைகள், இருக்காதிவேதமுனிவர், எண்ணரியகணநாதர், நவநாதர், சித்தர்கள், இரவி, மதிஆதியோர்கள், கந்தருவர், கின்னரர்கள், முதலாயினோர் இருமருங்கினும் நின்று, அஞ்சலிசெய்து அரகரஎன்றுஸ்துதிசெய்யவும, திருநந்திதேவர் வேத்திரப்படைகொண்டு தாக்கவும், வேதாகமங்கள் முறையிடவும், தேவதுந்துபிமுழங்கவும், எக்காளம், சின்னம், வலம்புரிசங்கங்கள்ஒலிக்கவும், சகலவாத்தியங்கள் கோஷிக்கவும், தேவர்கள் பூமழைபொழிந்து போற்றவும், மண்ணுலகமும்,விண்ணுலகமும்ஸ்ரீதாயானசெல்வம்,ஸ்ரீதாயானசெல்வமஎன்றுநாத்தழும் பேறவாழ்த்தவும்,அன்பிற்சிறந்தஇரத்தினவதியாரும், வேள்விசெய்கின்ற அந்தணர்களும், பாசுபதர், மகாவிரதர், ஆதிசைவர்முதலான சிவஞானச்செல்வரும், சிவாலயப் பணிவிடைசெய்வோரும், பஞ்சாக்ஷரத்தை உச்சரிக்கின்ற அன்பர்களும், மற்றவர்களும், கண்டு தரிசிக்கும்படி திருக்கோயிலினுள்ளேஎழுந்தருளினர்.

பின்பு பக்தியிற்சிறந்த இரத்தினவதியாரும், அவருடைய கணவனாகிய தனகுத்தனும், குற்றமில்லாத அவருடைய சுற்றத்தார்களும் ஸ்ரீ மட்டுவார் குழலாம்பா சமேத ஸாக்ஷாத் ஸ்ரீ தாயான செல்வத்தை அநுதினமும் பணிந்து நாரணனும், பிரமனும் அறிதற்கரிய சிவபதத்தை அடைந்தார்கள். ஆதலால் அழிவில்லாத பெரும்பதவியை விரும்பினவர்கள இத்திவ்விய சரித்திரங்களைக்கேட்கக்கடவர்கள் என்று கௌதமமுனிவர் திருவாய்மலர்ந்தருளினர். அவைகளைக்கேட்டநைமிசாரண்ய ரிஷிகளும், முனிவர்களும் அன்பினால் மனமுருகிப் பலவாறுகஸ்தோத்திரங்கள் செய்தார்கள்.

---

வாழி

வையமின் புறமாதர்கற்போங்கு க
செய்யகோலையரசன் செலுத்து க
பெய்கவானஞ்சிவாலயம் பீடுற ச்
சைவமென்னுஞ்சமயந்தழைக்க வே

திருச்சிற்றம்பலம்.

திரிசிராமலைமான்மிய சங்கிரகம்.

முற்றுப்பெற்றது.